

ஸ்ரீ சத்குரு திருவடி துணை!

# விதியின் சதியும் தெய்வ நிலையும் மோட்சம் யாருக்கு?

அருள்பவர்

ஸ்ரீ சத்குரு தூளி ஸ்வாமிகள்

ஸ்ரீ சத்குரு திருவடி துணை!

# விதியின் சதியும் தெய்வ நிலையும் மோட்சம் யாருக்கு?

அருள்பவர்

**ஸ்ரீ சத்குரு தூளி ஸ்வாமிகள்**

அன்பின் குடில்
253/1, மேட்டூர் பவானி மெயின் ரோடு, கோம்பூர்,
நெரிஞ்சிப்பேட்டை, பவானி (தாலுகா),
ஈரோடு (மாவட்டம்)
தொலைபேசி : 04256-27655



வெளியீடு :
திருவடிக் குழந்தைகள்
சென்னை

10 – 1

# பிரார்த்தனை

ஹே பரம்பொருளே!

ஸ்ரீ சத்குரு சிஷ்யர்களாகிய எங்களை சிரேயஸ்சுடன் இருக்க அருள்வாயாக! எங்களுடைய ஸ்ரீஆன்ம நாட்ட முயற்சிக்கு முழு பலத்தையும் கொடுப்பாயாக! எங்கள் மனச்சோர்வை அகற்றி தீரமுடன் நாங்கள் உழைக்க அனுக்ரஹிப்பாயாக!

அசத்தான இந்த உடல் உலக வாழ்க்கையிலிருந்து விடுபட்டு அதாவது பற்று, பந்தம், உறவு, இவைகளிலிருந்து வரும் ஆசை, கோபம், ஆத்திரம், அவசரம், வேகம், விரகதாபம், பயம், துக்கம் இவைகளை நீக்கி ஸத்ய பாதையில் எங்களை நடத்துவாயாக!

சபலம், சலனம், சந்தேகம், இவைகளால் தோன்றும் இருள்மயமான இந்த உலகைவிட்டு உறுதி, அமைதி, சாந்தி, மௌனம் ஆகிய ஆனந்த உலகிற்கு எங்களை அழைத்துச் செல்வாயாக!

எம பயத்தைப் போக்கி அதாவது இன்னொரு கர்ப்பத்தை நாங்கள் அடையாமல் காலாகாலம் கடந்த அந்த ஒன்றாக எங்களை ஆக்குவாயாக!

ஆசையால் வரும் மோகத்தையும், மோகத்தால் வரும் கோபத்தையும், கோபத்தால் வரும் அறிவு மயக்கத்தையும், அறிவு மயக்கத்தால் வரும் ஆத்ம நாசத்தையும், அந்த ஆத்ம நாசத்தினால் நாங்களும் நாசமாகாதபடி எங்களைக் காப்பாற்றி அருள்வாயாக!

குருவடி சரணம்! திருவடி சரணம்!!

உ

ஓ

ஸ்ரீ சத்குரு திருவடி துணை!

# விதியின் சதி

சர்வாந்தர்யாமியான இறையருள் மூன்று நிலைகளில் செயல்படுகிறது அதாவது

1. அதி ஆத்மீகம் 2. அதி பௌதீகம் 3. அதி தெய்வீகம் என மூன்றாகும். இதன் தன்மையையும், செயல்பாட்டையும் சிறிது உணர்த்துகிறோம்.

அதி ஆத்மீகம் என்றால் இயற்கை; அதி பௌதீகம் என்றால் ஒன்றோடு ஒன்று பிணைதல்; அதி தெய்வீகம் என்றால் அப்படி பிணைந்த பொருளின் நாமரூபம்.

1. இதில் இயற்கை என்றால் **விதிக்கப்பட்ட விதி!**
2. இயற்கையை செயற்கையாக்கி அப்படி பிணைவதால் எதிர்பார்ப்பை மாற்றி அமைக்கும் முயற்சி!!
3. அப்படி பிணைந்த நாமரூபத்தின் செயல்பாடு!!!

1. ஒரு மாணவன் இன்று பரீட்சை எழுதப் போகிறான். இரவு பகலாக நன்றாகப் படித்திருக்கிறான். அனைத்து கேள்விகளும் அவற்றின் விடைகளையும் நன்றாக ஞாபகம் வைத்திருக்கிறான். இவன் எண்ணம் 100/100 வாங்கி விடலாம் என்ற உறுதி!

இவன் **விதியின் சதி** 30/100; இது நிர்ணயிக்கப்பட்டது!

10-1

இவன் பரீட்சை ஹாலில் ஆனந்தமாக அமர்கிறான். **எல்லாம் நமக்குத் தெரியும்** என **அடி ஆழ அஹங்காரத்துடன்** கேள்வித் தாளை நோக்குகிறான். எல்லாம் தெரிந்த கேள்வியே! மளமளவென எழுதித் தள்ளினான். ஒருமணி நேர அவகாசத்தை 45 நிமிஷத்தில் எழுதிவிட்டான். ஒன்றாவது தெரியாத கேள்வி இல்லை என மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறான். **ஆனால் இவன் விதியின் சதியை அறியான்!**

## *(அவன் ஒருவனே அறிவான்!)*

எழுதும் **அவசரத்தில்** ''கேள்வி ஒன்று பதில் ஒன்று'' ஒன்றுக்குப்பின் முரணாக எழுதி வைத்து விட்டான். பேப்பர் திருத்தும் ஆசிரியர் பார்த்தார். இவன் நல்ல மாணவனாயிற்றே இப்படி பைத்தியம் என மாறுபாடாக எழுதியிருக்கிறானே. நூறுக்கு ஒன்று கூட போட லாயக்கில்லையே எனக் கருதி அனுதாபமாக 30/100 போட்டு வைக்கிறார். **இது விதியின் சதி.**

2. இவனும் நன்றாகப் படித்திருக்கிறான். அனைத்துக் கேள்விகளும் அவற்றின் விடைகளும் நன்றாக ஞாபகம் வைத்திருக்கிறான். இவன் எண்ணம் 100/100 வாங்கி விடலாம் என்ற மன உறுதி! இவன் **விதியின் சதி** 30/100 இது நிர்ணயிக்கப்பட்டது!! இவனும் பரீட்சை ஹாலில் ஆனந்தமாக அமர்கிறான். **எல்லாம் நமக்குத் தெரியும்** என **அடி ஆழ அஹங்காரத்துடன்** கேள்வித் தாளை நோக்குகிறான், எல்லாம் தெரிந்த கேள்வியே! மளமள என எழுத ஆரம்பித்தான். **ஆனால் பேனா சதி செய்தது.** அதாவது சில கேள்விக்கு பதில் எழுதினான். அடுத்து எழுத முடியாமல் பேனா மை தீர்ந்து விடலாம். அல்லது மை அடைப்பு ஏற்படலாம்

அல்லது பேனா தவறி கீழே விழுந்து பயன் அற்றுப் போய்விடலாம். இப்படி ஏதோ ஓர் **அசம்பாவிதத்துடன்** எழுத இயலவில்லை. இவன் பேப்பர் திருத்தும் ஆசிரியர் **உரிய மார்க் போட்டார்.** ஆனால் அதுவும் **விதியின் சதியால்** 30/100 என அமைந்தது.

3. இவனும் நன்றாக படித்திருக்கிறான். அனைத்துக் கேள்விகளும், அதன் விடைகளும் நன்றாக ஞாபகம் வைத்திருக்கிறான். இவன் எண்ணம் 100/100 வாங்கி விடலாம் என்ற மன உறுதி! இவன் **விதியின் சதியும்** 30/100; இது நிர்ணயிக்கப் பட்டது! இவனும் பரீட்சை ஹாலில் ஆனந்தமாக அமர்கிறான். **எல்லாம் நமக்குத் தெரியும்** என அடி ஆழ **அஹங்காரத்துடன்** கேள்வித் தாளை நோக்குகிறான். 'எல்லாம் தெரிந்த கேள்வியே' என மளமளவென எழுத ஆரம்பித்தான். எண்ணியபடியே அனைத்து கேள்விகளுக்கும் **தகுந்த பதிலே** எழுதி முடித்தான். ஆனந்தமாக எந்த **தங்குதடையின்றி** எழுதியதால் நாமே மேலானவன் என எண்ணிச் சென்றான்.

## ***இவனுக்கு விதி வேறுவிதமாக சதி செய்தது!***

இவன் பெயர் **கிரிதரன்.** படிப்பிலோ, ஒழுக்கத்திலோ, அடக்கத்திலோ நல்லவன். ஆனால் அனைவரிலும் நாம்தான் ***"மேலானவன், நல்லவன்"*** என்ற நச்சு எண்ணம் இருந்தது போலும்! இதே வகுப்பில் ஸ்ரீதரன் என்ற மாணவன் ஒருவன் இருந்தான். இவன் படிப்பு, நடத்தை, ஒழுக்கம் ஆகிய அனைத்திலும் **கெட்ட பெயர்** கொண்டவன் போலும்! இந்த இரு பரீட்சை

பேப்பரையும் ஓர் ஆசிரியர் திருத்தினார். அவர் கண்களுக்கு **கிரிதரன் பேப்பரும் ஸ்ரீதரன் பேப்பரும்**

***"மாறுபட்டுவிட்டன".***

நல்லவனாகிய கிரிதரன் பேப்பரைக் காணும்போதே ஸ்ரீதரன் பேப்பராக மதித்து **இவர் பேத எண்ணத்தினால்** இந்த திருட்டுப் பயலுக்கு ஒரு மார்க்கும் போடக் கூடாது என எண்ணி **விதியின் சதிப்படி** அனுதாபமாக ஐயோ பாபம் என 30/100 போட்டு வைத்தார். மோசமானவனான ஸ்ரீதரன் பேப்பரை கண்டார். **இவன் நம் மாணவன் - நல்லவன்** என்று அந்த பேப்பரை கிரிதரனுடையதாக பாவனை பண்ணி உள்ள உவகையுடன் "பேப்பர் படித்து பார்க்காமலேயே" 100/100 போட்டு வைத்தார். **இவன் விதி பலமாக இருந்தது போலும்!**

1. உலகம் என்பது ஒரு மாயா காரியம். இதைப் பிரித்துச் சொல்வது என்றால் உயிரினங்களின் தூலம் (ஜடம்), மண்மலை, மரம், செடி, கொடி, புல், பூண்டு இவை அனைத்தும் ஓர்மையாக்கி நோக்கினால் **இயற்கையின் புனிதத் தன்மை** மாறாமல் அப்படியே இருக்கும். **இது விதிக்கப்பட்ட விதி!**

2. உலகப் பொருள் என வரும்போது ஒன்று மற்றொன்றாக மாறுகிறது. (இங்கு மனம் வேலை செய்கிறது). அதாவது **நாமரூப** கற்பனை உருவாகிறது. உதாரணம் மரம் என்ற ஒன்று பல நாமரூபங்களாகவும், மண்மலை பல நாமரூபங்களாகவும், உயிரினங்களின் தூலம் கிருமி கீடகத்திலிருந்து யானை பரியந்தம் கோடானு கோடி நாமரூபங்களாகவும், பௌதீக ரீதியில் (பிணைப்பினால்)

வெவ்வேறாக **கற்பனா சொரூபமாக பேசப்படுகிறது.** உண்மையில் இவை அனைத்தும் **இயற்கைக்கு வேறு பட்டதல்ல! இயற்கையின் விதிக்கு உட்பட்டதே.**

3. என்னதான் நாமரூபங்களைப் பிரித்தாலும் அவற்றின் மூலம் இயற்கைதான். இதுவே உண்மை. ஆனால் அந்தந்த நாமரூபங்கள் **அசைவினால்** (இங்கு மனம் குணமாக வேலை செய்கிறது) இன்ப துன்பம் தோற்றப்படுகிறது. இது தோற்றமே தவிர உண்மை இல்லை. அதாவது ஜலத்தில் தோற்றும் சந்திரன் ஜல அசைவினால் எப்படி **அசைவதாக தோற்றினாலும்,** உண்மையில் சந்திரன் அசைவதில்லை, அதைப்போல **மனகுண தோஷத்தால்** ஜகமோ பரமோ (தெய்வீகமோ) அசைவதாகத் தோற்றினால் அவை உண்மையில் அசையவில்லை. **மனம் அசையாமல் நோக்கினால்** இயற்கை இயற்கையாகவே இருக்கும். இதுவும் **இயற்கையின் விதிக்கு உட்பட்டதே!**

**இந்த மூன்றின் பொருள்:-** இயற்கை பரசொரூபம்; செயற்கை தேவ தெய்வ ஜக சொரூபம்; இயக்கம் (அசைவு) **கர்மா சொரூபம்!**

***"இங்கு மாயா மனம் இல்லையானால்***

பரமும் இல்லை; தேவ தெய்வ ஜகமும் இல்லை; கர்மாவும் இல்லை

***"ஒன்றுண்டு;*** ஆனால் ***சொல்வதற்கில்லை"***

நன்றாகக் கவனி

ஜகத்தையும், ஜகப்பொருள்களையும் **கண்களால்** கண்டு கண்டு விளக்கங்களைக் **காதுகளால்** கேட்டு கேட்டு **வாயினால்**

புதுப்புது விளக்கங்களைப் பேசிப் பேசியே "**இல்லாததை இருப்புடையதாக**" ஸ்தாபித்து விடுகிறோம். **கண்டாலும், கேட்டாலும் விவஹரிக்கும்** ***"வாக்கு இல்லையானால்"*** ஜகம் தோற்றாது; அப்படி ஜகம் தோற்றினாலும் அமைதியாகவும், ஆனந்தமாகவும் தோற்றும்! **இங்கு அனுபவம் மஹா மௌனமாகும்**



# தெய்வ நிலை

தெய்வ நிலையை (அனுக்ரஹத்தை) மூன்றாகப் பிரிக்கலாம். 1. **தோன்றாத் துணை** 2. **அசரீரி** 3. **அந்தர்யாமி** அதாவது **இதயவாஸி** என மூன்றாகும்.

*1.* ***தோன்றாத் துணை:-*** பக்குவம் அடைந்துவரும் ஓர் பக்தனுக்கு பகவான் பல நாமரூபங்களில் (ஊர்வன, பறப்பன, நீந்துவன, நடப்பன) **துணைவனாக அருள் புரிவான்.** **"தெய்வம் மனுஷ்யாணாம்"** என்ற நிலையில் **"தடுத்தாட் கொள்வதில்"** அபகாரமாகவும் **"கொடுத்தாட் கொள்வதில்"** உபகாரமாகவும் சில காரியங்களில் **அதிசிரத்தையாக** ஈடுபடுவான். இந்த பக்தன் **கவனக் குறைவினால்** இதைச் செய்வது ஸ்ரீ பகவான்தான் என உணர முடிவதில்லை. காரணம் **நாம ரூப மோஹமாகும்.** இவனுக்குத் தோற்றுவது மனைவி மக்களாகவோ, அண்ணன் தம்பியாகவோ, மாமன் மைத்துனனாகவோ, எப்படியோ உறவு சுற்றமாகவோ, நண்பன் என்ற நிலையிலோ தோற்றும். நாமரூபம் பழகிப் போன ஒன்றானதால் அதுதான் முன் நிற்கும். ஸ்ரீ பகவத் சொரூபம் அமைதி, சாந்தி, கருணை அருள் பிரவாகமாக இருப்பதால் அவை உன் ஊன (மன) நேத்திரத்திற்குத் தோற்ற முடியாது! ஆனால் உன் மனம் **இறை சொரூபத்திலும் குருஸ்மரணையிலும்** இருந்தால் நடைபெறும் காரியம் இன்ப துன்பமாக இருந்தாலும் ஆனந்தமாகவும் நன்மையாகவும் மாற்றி அமைக்க முடியும். குழந்தாய்! உன் பிரார்த்தனையை இப்படி வைத்துக் கொள்ளலாம். இறைவா! நீ எந்த நேரத்திலும், எந்த ரூபத்திலும் வா; ஆனால் உன் வரவை **உள் உணர்வாகக்** கொடுத்து வா என உருகினால் **தோன்றாத் துணைவனின்**

தோற்றத்தை, அந்த அருள் பிரவாகத்தை, அவசியம் நீ **உணர்ந்து அனுபவிக்க முடியும்!!! இது அனுபவம்!**

*2. அசரீரி:-* **இது நாமரூபம் இல்லாதது. ஒலி சொரூபம்.** உலகியல் காரியத்தையும் தெய்வீக இயல்போடு அதாவது தெய்வ நாமாவோடு அதாவது பரிபூரண சரணாகதி நிலையில் **"எல்லாம் நீயே"** என்ற அக உணர்வோடு செய்யும்போது அனுகூலமாகவோ, பிரதிகூலமாகவோ அதாவது (செய், அல்லது செய்யாதே) ஓர் ஒலி கண்டிப்பாகக் கிடைக்கும். அதாவது உன் சமீபமாக ஒருவர் வார்த்தையோ அல்லது சிலர் கலந்துரையாடும் நிலையில் வார்த்தைகளோ உன் செவிக்கு எட்டும். **அதை உன்னால் உணரவும் முடியும்.** இது தெய்வ வாக்காகும். அதை அப்படியே ஏற்க வேண்டுமேயன்றி அதை சந்தேகித்தாலோ, அதைப் பிறரிடம் ஆராய்ச்சி செய்தாலோ, கலக்கமும் பயமும் கொண்டாலோ

***"நீ உன்னை (இறைவனை) நம்பவில்லை".***

இங்கு அசரீரி பயனற்றுப் போகும். அனைத்தும் இறை சொரூபம் என உணர். அங்கு புண்ணிய பாபமோ, கஷ்ட நஷ்டமோ இல்லையென்றாகிவிடும். ஆனந்தமும் சுகமும்தான் தோற்றும்.

*3. அந்தர்யாமி அதாவது இதயவாஸி:-* இது அக **உணர்வு** ஆகும். ஒரு கார்யம் செய்யும்போது பல சிந்தனை (கற்பனை) எழும். இது மனதின் அதாவது புத்தியின் செயலாகும். அந்த கற்பனையைக் குறைத்து அனைத்தும் இறைவனே, அனைத்தும் இறைவன் செயலே, இதன் விளைவும் அவனுடையதே! நான் என்ற எண்ணமோ, என்னுடையது என்ற உடைமையோ நமக்கில்லை. எல்லாம் **அவன் செயலே** என்ற "பேருணர்வோடு கூடி" சில நிமிஷம் அவனோடு ஒன்றினால் **"புத்தி வேலை**

**செய்யாது''**. அங்கு **அறிவு ஒன்றே** பிரகாசிக்கும். இதை எப்படி உணர்வது என்றால் அங்கு **சந்தேகம்**, அதனால் **கலக்கம்**, அதனால் **பயம்** அவசியம் தோற்றாது. **''திருப்தி''** உண்டாகும். அதாவது நலமாக நடக்கும். சுகமாக முடியும் என உன்

***''உள்ளுணர்வு தெளிவாகும்''.***

இங்கு எவரிடமும் விளக்கமோ தெளிவோ பெறத் தேவையில்லை. **சர்வாந்தர்யாமி** என்பது மஹா ஆகாயம். அதாவது ஊசி நாட்ட இடம் இல்லாமல் எங்கும் வியாபகமாக இருப்பதாகும். **அந்தர்யாமி** என்பது குட ஆகாயம். அதாவது எங்கும் வியாபகமாக இருக்கப்பட்டதை **''நமக்குள் நாமாக''** உணர்வதாகும். இதுவே ***''இதயவாஸி''.***

இது எல்லோருக்கும் உண்டு. ஆனால் **நாமரூப குண** மயக்கமும்; **சகவாசனை தோஷ** பழக்கமும்; ஜன்ம ஜன்ம **துர்வாஸனை** இணக்கமும் அதாவது பின்னிப் பிணைந்த பிணக்கமும் இந்த ஜீவனை விடுவதில்லை.

**ஜீவனை விடுவதில்லை** என்பதைவிட **ஜீவன்** **இதை விடுவதில்லை.** அதாவது **''நான் ஜீவன்! நான் ஜீவன்!!''** என்ற **ஜீவமனம்** விடுவதில்லை.

நீ அந்தர்யாமி நிலையை உணர்ந்து **அனுபவித்துவிட்டால்** சாட்சி நிலையைப் பெற்று விடுவாய். சாட்சி நிலை உனக்கு அனுபவமாகிவிட்டால் உலகமோ ஜீவர்களோ உன் ஊனக் (மனக்) கண்களுக்குத் தோற்றும். ஆனால் **செயலற்று** தோற்றும். அதாவது அங்கு குணங்கள் கண்டிப்பாகத் தோற்றாது. குணங்கள் தோற்றவில்லை என்பதை நீ பிரத்தியட்க்ஷமாக உணர்வது

என்றால் நீ T.V. பார்த்துக் கொண்டிருக்கிறாய் என வைத்துக் கொள். உன் கையில் **ரிமோட்** இருக்கும். அதன் மூலமாக நீ எந்த சேனலையும் காண முடியும். அதாவது உன் மனைவி, குழந்தை, உறவு ஆகிய குடும்பம் தோற்றும். **"உறவு அவசியம் தோற்றாது"**; பாவைக் கூத்தின் பொம்மைகளாகத் தெரியும். (பாவைக் கூத்து என்றால் ஒரு திரை. திரையின் பின் ஒரு விளக்கு; அந்த விளக்கொளியில் குறிப்பிட்ட பதுமைகளை **ஒருவன் ஆட்டி வைப்பான்.** அவன் கை விரல்களில் அந்த பதுமைகளின் கை, கால், தலை இவைகளின் கயிறு வெளியே தோற்றாமல் மெல்லிய நிலையில் கட்டப்பட்டிருக்கும். இவன் **விரல் அசையாமல்** பதுமை களிக் கூத்தாடாது.) இதைப்போல இந்த உலக கூட்ட பொம்மைகளை ஒருவன் அந்தர்யாமியாக இருந்து ஆட்டுகிறான் என உன்னால் உணர முடியும். உன் கையில் ரிமோட் இருப்பதால் **வேண்டிய காட்சியைப்** போட்டு ரசிக்கலாம். **அங்கு மனம் பற்றாது.** இது பொம்மைக் காட்சிதானே எனத் **தெளிவாக இருக்கும்! உள்ளிருந்து ஆட்டுவது ஸ்ரீ பகவான்; வெளியே இருந்து பார்த்து ரசிப்பது பக்தன்!!** நீயும் ஒரு காலத்தில் அந்தப் பதுமைகளோடு பதுமையாய் ஆடியவன்தான். அங்கு **வினையும்** அதை இயக்கும் **மாயா மனமும்** பின்னிப் பிணைந்திருந்தது. ஆனால் நீ என்ன செய்தாய்?

*நீ:-* போதும் ஐயா இந்த விளையாட்டு! ஆடிப்பாடிக் கொண்டாடி அலுத்து விட்டோம்! ஒரு பிறவி இரண்டு பிறவி அல்ல கோடானு கோடி பிறவி எடுத்து எடுத்து ஓய்ந்து விட்டோம்! கடைக்கண் பாராய் கருணைக் கடலே என உருகி வேண்டினாய்!!!

**அவன்:-** போடா போ பிழைக்கத் தெரியாதவனே! எப்படி எப்படியோ இந்த ஜீவர்கள் எல்லாம் மனைவி, மக்கள், பொன், பொருள் என **இன்ப மோஹத்தில்** திளைக்கிறார்கள். உனக்கு அலுப்பு தட்டிவிட்டதோ? எம் போக்கியத்தைதான் **ராஜபோகமாக** அனுபவிக்க கோடானு கோடி பேர் இருக்கும்போது நீ ஒருவன் போனால் **எமக்கென்ன நஷ்டம்?**

என உன்னைத் தூக்கி எறிந்துவிட்டான். அதாவது நாடக ஸ்டேஜை விட்டு உன்னை அகற்றி விட்டான். பின் அவனே ஸ்ரீ சத்குரு நாதனாக வந்து உன்னை ஆட்கொண்டான். நீ பல ஜன்மாக்களில் நடித்த நாடக வேஷங்களை நீயே பார்க்க (அறிவுக்) **கண்ணாடியையும்** கொடுத்து **தீட்சண்ய** புத்தியாகிய ரிமோட்டையும் உன் கையில் கொடுத்து **"உன் விளையாட்டை நீயே பார்"** என உன்னை சாட்சியாக (அந்தர்யாமியாக) வைத்திருக்கிறான்.

திரைக் காட்சியையோ T.V. காட்சியையோ காணும் ஜீவன் **"அதைத் தனதாகப் பாவித்து"** சோகம், மோஹம், பயம், துக்கம் இவைகளினால் பீடிக்கப்பட்டு **"குண தோஷங்களை பதிவு செய்வதால்"** இவர்கள் இந்த நாடக ஸ்டேஜில் திரும்பவும் ஏற வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டு விடுகிறது. **இதுவே பிறவி ஆகி விடுகிறது.** சாதனை பண்ணப்பட்ட நீ அவ்வாறல்ல.

## "நடித்து முடிந்து ஓய்வு பெற்றவன்".

அந்தர்யாமி என்றால் **உன் வினையால் சூழப்பட்ட** குடும்பம், உறவு, தொழில் இவைகளில் எந்த குண பாதிப்புமின்றி, **கண் இருந்தும் குருடாய்; காது இருந்தும் செவிடாய்; வாய் இருந்தும் ஊமையாய்;**

## “ஆனால் ஸத்யமான இயக்கம் உண்டு”

இங்கு உள்ளம் இல்லை. அதாவது விகாரம் இல்லை; அதாவது பேதம் இல்லை; அதாவது புண்ணிய பாபம் இல்லை; அங்கு நீயாக போடும் T.V. போலும்; வேண்டாம் என்றால் அதை நிறுத்தவும் பழகிக் கொண்டால் அமைதியும் ஆனந்தமும் நிரந்தரமாக இருக்கும். இது அந்தர்யாமி. சர்வாந்தர்யாமி என்றால் இந்த உலகில் எந்த மூலை முடுக்கிலும் அனைத்து ஜீவராசிகளிடத்திலும், குண தோஷங்களால் என்ன நடந்தாலும், எந்த எழுச்சியும் இல்லாமல் **“புண்ணிய பாபம்”** தோற்றாமல் **நலமும் சுகமும்** மட்டும் நீ உணரும் நிலை நீ பெற்று விட்டால் சர்வ சாட்சி அதாவது சர்வாந்தர்யாமி அதாவது அகண்ட விருத்தி பெற்ற நிலையாகும்!

புண்ணிய பாபங்கள் ஒரு ஜீவன் அனுபவ நிலையில் இருக்கும்போது மன இயக்கத்தால் தெரிய வரும். ஆனால் இது மனக் கணக்காகும்; அறிவின் சொரூபமல்ல!!! இந்த மனதிற்கு கண்களும், காதுகளும், வாய்ப் பேச்சும்தான் **முதல் தரமான எதிரிகளாகும்!** அதனால் எது புண்ணியம் எது பாபம் எனத் தெரியாது. “புண்ணியத்தைப் போல் பாபமும்; பாபத்தைப் போல் புண்ணியமும் தோற்றும்” இதில் அளவற்ற **“பொறுமையுடன்”** அமைதியுடன் காத்திருந்தால் அவஸ்யம் தெளிநிலை பெறலாம்.

### உதாரணம்

எம் குடிலில் நான்கு புறமும் **திறந்த வெளியாக** இருக்கும். உலகில் எங்கெங்கு என்ன நடந்தாலும் அதை எம்மால் உணர முடியும். பிறர் எம்மை காண முடியாது.

"ஆனால் அசாத்திய அமைதி காப்போம்". அங்கு புஷ்பச் செடிகளும், பழச் செடிகளும், நிழல் தரும் மரங்களும் உண்டு. (இது திருவண்ணாமலை சம்பவம்) கோடை காலத்தில் அந்த செடிகளுக்கும், மரங்களுக்கும் ஜலம் விடுவதற்கு அங்கு உள்ள மேஸ்திரி இரண்டு பெண் குழந்தைகளை அமர்த்தி இருந்தார்.

ஒவ்வொரு மரத்திற்கும் ஒவ்வொரு செடிக்கும் ஒவ்வொரு குடம் ஜலம் விடுவர். ஒரு சில நாட்களில் வெய்யில் கொடுமை காரணமாக ஒரு குடம் ஜலத்தை இரு மரம் அல்லது மூன்று மரங்களுக்கு ஊற்றி விட்டு போய் விடுவர். அன்று மாலை 5 மணிக்கு இது வாக்கிங் போகும்போது, அந்த மரம் அழமாட்டாக் குறையாக இந்த பைத்தியத்திடம் முறையிடும். அதாவது ஹே பாபா! உம்மிடம் வேலை பார்க்கும் இந்த பெண்கள் எங்களுக்கு கால் குடமும் அரை குடமும் ஜலம் விட்டால் எங்கள் நிலை என்ன ஆகும்? சீக்கிரம் பட்டு உலர்ந்து போவோம். நீ கொஞ்சம் கருணை காட்டக் கூடாதா எனக் கெஞ்சும்!

ஒரு நாள் இது மேஸ்திரியிடம் அந்த குழந்தைகளின் செயல்களைச் சொல்லியது. அவரும் அந்த குழந்தைகளை அழைத்து மேலே இருந்து உங்கள் செயல்களை நம் ஸ்வாமிகள் கவனித்து வருகிறார். இனி இவ்வாறு செய்யாதீர்கள் என எச்சரித்தார் போலும். அக்குழந்தைகளும் அவர் முன் பணிவாக ஒப்புக் கொண்டுவிட்டு தனிமையில் அவ்விரு பெண்களும் இந்தப் பைத்தியத்தைத் திட்டினார் போலும். அதாவது இந்த சாமிக்கு என்ன வேலை? ஓர் கோவணம் மட்டும் கட்டிக் கொண்டு சும்மாவே இருக்கிறார். எந்த வேலையும் செய்ய மாட்டார், செய்யவும் இயலாது. நமக்கு இவரா சம்பளம் கொடுக்கிறார்? நம்

மேஸ்திரி சம்பளம் கொடுக்கிறார். அவருக்கு இல்லாத அக்கரை இவருக்கென்ன? நம்மளை ஏன் இவர் கண்காணிக்க வேண்டும்? என இன்னமும் சில கடுமையான வார்த்தைகளைக் கொட்டின போலும். பாவம்!!!

அன்று இரவு எமதய்யன் (திருடன்) வந்தான்

"ஓஹோ ஹோ! திருவடி! நீ எம் தொழிலை மேற்கொண்டு விட்டாயா? பலே! பேஷ்! எமக்குக் கொஞ்சம் வேலை மிச்சம்! நன்றாக பார்!!"

இந்த பைத்தியத்திற்கு ஒன்றும் புரியவில்லை. "ஏனையா? என்ன விஷயம்? உன் தொழிலை யாம் பார்க்கிறோமா? இது என்ன புதுக் கதை?"

அவன் இதை மடக்கினான். "பின்னே என்ன? மரம், செடி, கொடியெல்லாம் உன்னிடம் முறையிட, **உனக்கு கேட்க காதும் இருக்கிறதா?** அதனிடம் அனுதாபம் காட்டுகிறாயா?

**கருணையோடு இருக்கப்பட்டவனுக்குக் காருண்யம் எதற்கு??"**

***கருணை:-*** ஒரு ஜீவன் கஷ்டப்படும் போது உன்னால் உதவி செய்ய வேண்டிய **பிராப்தி** இருந்தால் அது உன்னை இயக்கிவிடும். அங்கு **எண்ணமற்ற நிலையில்** செய்துவிடு. அங்கு முன்னும், பின்னும், தற்காலிகத்தையும் மூலத்தோடு விட்டுவிடு. உன்னிடம் செயல்பாடில்லையென்றால் "இறைவா! இதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதை நீ செய்! நீயே யாவுமாக இருக்கிறாய்" என பொறுப்பை அவனிடம் விட்டு விட்டு நீ சும்மா இரு. **இது கருணை.**

**காருண்யம்:-** கஷ்டப்பட்ட ஜீவனுக்கு இரங்கி நான் எனது என்ற எண்ணத்துடன் செயலாற்றுவது. இதன் பலன் உனக்கே. இது காருண்யம்.

கர்ம காண்டிகளுக்கு காருண்யம் உண்டு. பக்திமான்களுக்கு கருணை உண்டு; ஞானிகளுக்கு இவ்விரண்டும் இல்லை. ஆனால் பரகர்மா நிமித்தம் **பார்வை, கேள்வி, எண்ணம்** இவை இல்லாமல் தாமே நடைபெறும். ஆனால் நீ இன்று இந்த மரங்களுக்காக இறங்கி கருணை நிலையில் ஒரு காரியம் செய்து, சில ஜீவர்களுக்கு "அபசாரத்தையும்" உண்டு பண்ணிக் கொண்டாயே! இது பொருந்துமா? என கேட்டு கடகடவென சிரித்தான்.

**அந்த பைத்தியம் கேட்டது:-** "என்ன அபசாரமா!! இங்கு ஒன்றும் விளங்கவில்லையே! அந்த அளவுக்கு என்ன காரியம் நடந்து விட்டது?"

அவன் கடகடவென சிரித்துக் கொண்டே, "நீ சுத்தப் பைத்தியம் போ!! நீ அந்த குழந்தைகள் பற்றி மேஸ்திரியிடம் சொல்ல, மேஸ்திரி அந்தக் குழந்தைகளைக் கண்டிக்க, அந்தக் குழந்தைகள் **உன் நிலை அறியாமல்** உன்னைத் திட்ட, அந்த வாஸகம் உன்னைத் தாக்காதே! எறி பந்து போல் அவைகளையல்லவா தாக்கும்! பிறகு இது அபசாரம் இல்லாமல் என்னவாம்?" அந்த பைத்தியம் அழமாட்டாக் குறையாக கேட்டது. "நீ சூதறிந்த கள்வன்தானே! அன்றே தடுத்தாட் கொள்ளலாகாதா?" அவன் சொன்னான் "பொறு! பொறு!! அவசரப்படாதே! அந்த மரங்கள் உன்னை வாழ்த்தினால் அந்தப் **புகழுரையில் இந்த இகழுரை** சாம்பலாகி விடும். நாளை காலையில் பார் உண்மை தெரியும்" என்றான்.

அவன் என்ன மாயம் செய்தானோ யாம் அறியோம். அன்று இரவு மழை கொட்டோ கொட்டென கொட்டிவிட்டது. எங்கும் ஒரே ஜலப்பிரளயம். அதிகாலை 6 மணிக்கு வாக்கிங் சென்றோம். அந்த மரங்கள் தம் தலை வணங்கி வாழ்த்தின அதாவது:- "ஹே பிரபு! ஜலம் இல்லாமல் கருகிப் போகிறோமே என உம்மிடம் முறையிட்டோம். எங்கள் நிலைக்கு இறங்கி **கருணை மழை** கொட்டோ கொட்டென கொட்டிவிட்டது. இனி நாங்கள் பிழைத்துக் கொள்வோம். இன்னும் ஓர் இருபது நாட்களுக்கு இந்த ஜலம் எங்களை காப்பாற்றும். எம் மவராசா! நீ நல்லா இருக்கணும்! இப்படி அடிக்கடி மழை பெய்தால் போதும். வேறு யாரும் எங்களுக்கு ஜலம் விட வேண்டாம். உன் பார்வை ஒன்றே எங்களுக்குப் போதும், எங்களுக்காகவே வந்த புண்ணியாளன் நீ!" என பல புகழுரை செய்தன. யாம் இவைகளை கவனிக்காமலே சிரக்கம்பம் செய்துவிட்டே எம் வழியே சென்று விட்டோம்!

ஒரு சமயம் இரு மாடுகள் கேட்டைத் தாண்டி உள்ளே வந்து மேய்ந்து கொண்டிருந்தன போலும். எம் பிரம்மச்சாரிகளில் ஒருவன் அதை வெளியே துரத்தி இருக்கிறான். அவ்விரண்டும் வெளியே சென்றுவிட்டன. உள்ளே பசும்புல் அதிகம் தோற்றுவதால் மீண்டும் அந்த இரண்டு மாடுகளும் உள்ளே வந்துவிட்டன. மீண்டும் அந்த பிரம்மசாரி வெளியே கொஞ்ச தூரம் தள்ளி விரட்டிவிட்டு போய் விட்டான்.

இந்த பைத்தியம் தூரத்தில் இருந்து வருவதை இவ்விரண்டு காளைகளும் பார்த்து விட்டன போலும்? எம் அருகே அந்த இரண்டு எருதுகளும் வந்து குனிந்த தலை நிமிராமல் **குரூர பார்வையுடன்** கேட்டன.

**மாடு:** ஏ பைத்தியக்காரப் பையா! (பையா என்றால் தம்பி) அங்கு வேலியும், கேட் வாசலும், இருக்கிறதே அது உன் இடமா?

**பைத்தியம்:** எந்த வேலி! எந்த வாசல்? அப்படி ஒன்றும் இங்கு தோற்றவில்லையே!

**மாடு:** இந்த பாஸாங்கு வார்த்தை எல்லாம் இங்கு வேண்டாம். அந்த இடம் உன்னுடையதா? இல்லையா?

**பைத்தியம்:** இந்த பாஸாங்கு வார்த்தை, பசப்பான வார்த்தை (பாசமானது, பந்தமானது) இது எல்லாம் இதை விட்டு ரொம்ப காலம் ஆகி விட்டதே! நீ புதிதாக கேட்கிறாயே! இடம் என்று எந்த மண்ணை சொல்கிறாய்?

**மாடு:** நீ சுத்தமான பைத்தியமாக இருக்கிறாயே! ஒன்றும் தெரியாதவன் போல் நடிக்கிறாயோ? உன் நடிப்பு எல்லாம் எங்களிடம் செல்லாது! அந்த அண்ணாமலை ரமண குடிரம் உன்னுடையதா? இல்லையா?

**பைத்தியம்:** இல்லையே!

**மாடு:** அங்கு அந்த பிரம்மசாரி விரட்டினானே!

**பைத்தியம்:** அதை அவனிடம் கேள். அவன் விரட்ட இதனிடம் கேட்கிறாயே! இது வேண்டாத வேலைதானே.

**மாடு:** அவன் உன் பிரம்மச்சாரிதானே?

**பைத்தியம்:** பிரம்மச்சர்யம் அவனுடையது, அவன் அதை கட்டிக் காக்கிறான். நீ அவனிடம் கேட்காமல்

எம்மிடம் வந்து மோதுகிறாயே! இது முறையா? **“ஊருக்கு எளியவன் பிள்ளையார் கோவில் ஆண்டியாம்”** இந்த பழமொழிப்படியும் **“தென்னை மரத்தில் தேள்கொட்ட பனை மரத்தில் நெறி (வீக்கம்) கட்டியதாம்”** என்ற பழமொழிப்படியும் அவனை நோக்கி அப்பா இந்த இடம் உன்னுடையதுதானா எனக் கேட்காமல் ஒன்றும் இல்லாத பைத்தியத்திடம் முட்டி மோதுகிறாயே அவனைக் கேள்.

***மாடு:*** இந்த வீண் பிரசங்கம் எல்லாம் எனக்கு வேண்டாம். அந்த பிரம்மச்சாரி உன்னுடையவனா இல்லையா?

***பைத்தியம்:*** இந்த தூலமே எம்முடையதல்ல! அப்படி இருக்கும்போது இன்னொரு தூலத்தையும் ஏதோ ஓர் இடத்தையும் சுட்டிக்காட்டி இது உன்னுடையது தானே எனச் சொன்னால் யாம் என்ன பதில் சொல்ல?

***மாடு:*** எனக்கு வரும் ஆத்திரத்தில் உன்னை இப்படியே முட்டி தூக்கி எறிந்து விடலாம் எனத் தோணுது. ஆனால் உன்னை முட்ட முடியாதே. முட்டினால் என் கொம்புதான் முறியும்!

***பைத்தியம்:*** அன்புக் குழந்தாய்! ஏன் இந்த ஆத்திரம்? ஆத்திரம் அறிவு நாசம். உனக்கு இன்று பகல் எல்லாம் எங்கெங்கு உணவு வைக்கப்பட்டிருக்கிறதோ அங்கு உள்ள உணவு தானே கிடைக்கும். “கிட்டாதாயின் வெட்டென மற” என்றபடி எந்த **“உணவு உன்னைவிட்டு அகல்கிறதோ,**

**அதை அந்த க்ஷணமே விட்டு நீ அகல வேண்டும்".**

அதை முயற்சித்தாலும் சிரமமே!

அதை உண்டாலும் அது அஜீரணமே!!

இது நீ அறியாததா? எம்மை நன்றாக கவனி!!

## "*யாமே நல்ல மேய்ப்பன்*"!!

யாமே அன்றும் இன்றும் என்றும் இந்த ஜீவர்களை மேய்க்கிறோம்! ஆசை வசைப்பட்ட ஜீவர்களுக்கு என்னதான் போதித்தாலும் அந்த

**ஆசை மனம் உங்களை விடுவதில்லை.**

**நேசிக்கும் யாமும் உங்களை விடுவதில்லை.**

அந்த மாடு (முரட்டுத்தனம்) இரண்டும் அமைதியும் சாந்தியும் (பசு என) ஆயின.

அந்த முரட்டு மாட்டைப்போல் "தூரத்துப் ***பச்சை*** கண்ணுக்கு குளிர்ச்சி" என்பது போல் பாய்ந்து பாய்ந்து ஓடுகிறீர்கள். உங்கள் **மூக்கு சரடு** எம் வசம் இருப்பதை மறந்து விட்டீர் போலும்?

***எட்ட மட்டும் விடுவோம்!***

***கிட்ட இழுத்து அணைவோம்!!***



# மோட்சம் யாருக்கு?

ஓர் உத்தமமான பக்தன் இருந்தான். பகவத் ஆராதனை அபிஷேகம், ஆரத்தி, நாம பஜனை இவைகளில் அதி முதிர்ச்சி அடைந்து ஸ்ரீ பகவானைக் காணும் பாக்கியமும், அவனோடு உரையாடும் பாக்கியமும் பெற்றான். இந்த பக்தன் உருகி அழைத்தால் ஸ்ரீ பகவான் வந்துவிடுவான். பகவானோடு கொஞ்சி குலாவி விளையாடுவதில் பேரானந்தம் (பெயரளவில் ஆனந்தம்) கொள்வான்.

**பகவானைக் காணும் நிலை:** எந்த இறைவனை நீ காண விரும்புகிறாயோ அந்த உருவத்தை **உன் மனக் கண்ணால்** கண்டு, கண்டு, கண்டு உள்ளம் துடிக்க வேண்டும். மண், பொன், பெண் ஆகிய ஜகப் பொருளை, **காகத்தின் எச்சத்தைப் போல்** தள்ளப் பழக வேண்டும். இப்படி ஜகத்தைத் தள்ளும் நிலையில் **"திட வைராக்யம்"** வேண்டும். அந்த ஸ்ரீ பகவானைக் **காணும் துடிப்பும்** "அனைத்து செயல்களும் அவனால் தான் நடைபெறுகிறது" என்பதிலும் **"பரிபூரண நம்பிக்கை"** வேண்டும்!

**வைராக்கியத்தில் அணுப்பிரமாணம் "சபலம்"** ஏற்பட்டாலும்; இந்த இரு **நம்பிக்கையிலும்** அணு அளவாவது **"சந்தேகம்"** ஏற்பட்டாலும் அந்த தெய்வீக காட்சியை நீ காண முடியாது!!!

**"கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை"**

என்றால் இது முடியாத காரியம். கரைத்த கூழ் சாப்பிட வேண்டுமானால் அடர்ந்த மீசையை எடுத்துவிட வேண்டும்!

முகத்தின் **அழகு மீசை** என அதை வளர்க்க விரும்பினால் கூழை மறந்துவிடு! அதேபோல் தெய்வக் காட்சியை விரும்பினால் உடல், உலக, பொருள்களை அடியோடு மறந்துவிட வேண்டும். உடல் உலக, பொருள்களாகிய மீசை வேண்டுமானால் தெய்வத்தை மறந்துவிடு.

## "**ஆனால் அது** (தெய்வம்) **உன்னை மறப்பதில்லை**"

உன்னோடு உனக்கு எல்லாமாய் அது இருக்கும். ஆனால் அதை நீ காண முடியாது. ஸ்ரீ குரு கிருபையால் அந்த உணர்வு பெற்றால் அதை நீ உணர முடியும்!

சரி இனி கதையைக் காண்போம்!

இந்த பக்தன் ஓர் ஆஸ்ரமம் வைத்திருந்தான். அக்கம் பக்க கிராம ஜனங்கள் இந்த பக்தனிடம் வந்து, பக்தி பஜனை பண்ணி பேரானந்தம் அனுபவித்துச் செல்வர். இது பல வருஷங்களாக நடந்து வந்தது. இந்த பக்தனுக்கு **நாம்தான் பகவானைக் காண்கின்றோம் என்ற பெருமிதம்** இருந்தது. அதாவது **"தற்பெருமை"** இருந்தது. இவன் ஆஸ்ரமத்திற்குச் சற்று தூரத்தில் ஊருக்கு ஒதுக்குப்புறமாக ஓர் ஆலமரம் இருந்தது. அதில் ஓர் பெரியவர் அமர்ந்திருந்தார். நிழலுக்கு ஒரு குடிசை கூட இல்லாதவர். அந்த பெரிய ஆலமரம் பல விழுதுகளுடன் அடர்ந்து இருந்ததால் அடிமரம் பல விழுதுகளுடன் கூடி ஓர் குகைபோல் இருக்கும். மழைக்கும், இரவிலும் அதனுள் புகுந்து கொள்வார். பகலில் வெளியே ஓர் ஆசனத்தை விரித்து அதில் அமர்வார். பைத்தியம் போல் சிரிப்பார் அங்கு அமரும் பறவைகளுடன் பேசுவார். ஆடு மாடு அந்த நிழலில் வந்து நிற்கும் அவைகளுடனும் சிரித்துப் பேசுவார். மாடு மேய்க்கும்

சிறுவர் சிறுமிகளுடனும் சிரித்துப் பேசி விளையாடுவார். அவர்கள் அன்பாகக் கொடுக்கும் எந்த பதார்த்தத்தையும் அன்புடன் ஏற்பார். கிராம ஜனங்கள் எந்த உணவு கொடுத்தாலும் அன்பாக ஏற்பார். எந்த **புறச் சின்னமும்** இல்லாதவர். கந்தல் ஆடையுடன் எவர் பார்த்தாலும் ஒரு பைத்தியம் எனத் தோற்றம்.

இந்த பக்தனும் அந்தப் பெரியவரை பல முறை பார்க்கிறான். அவர் வாயிலிருந்து ஓர் இறை நாம உச்சாரணமும் வந்ததை இவன் அறியான். பஜனையோ, பூஜையோ, தியானமோ, யோகமோ எதுவும் இவர் செய்வதாகத் தோற்றவில்லை. அவன் இவரைப் பற்றி சற்று ஆழ்ந்து சிந்தித்தான். ஐயோ பாவம் இந்த பெரியவர் வயது 60-க்கும் மேல் இருக்கும் எனத் தோற்றுகிறதே! ஒரு நாளாவது ஒரு தடவையாவது இவர் இறை நாமா சொன்னதை நாம் கேட்கவில்லையே. நாளை இவர் இறந்தால் ஓர் பிரயோஜனமும் இல்லாமல் போய் விடுவாரே! மனுஷ்ய ஜன்மா எடுத்தும் இவர் பிறவி இப்படி அவலமாய் முடிகிறதே! இவருக்கு உறவோ எவரும் இருப்பதாக தெரியவில்லையே! இறைவன் ஒருவன் உறவு இல்லாமல் போனால் இந்த ஜன்மா வீண்தானே! இறந்த பின்பு அடுத்து எந்த ஜன்மா கிடைக்கும் என தெரியாதே.

பார்வைக்கும், பழகுவதற்கும் மிகுந்த அன்புடையவராக காணப்படுகிறாரே! அவருக்குச் சில புத்திமதிகளைச் சொல்லி பக்தியை அவர் உள்ளத்தில் பதியச் செய்வோம் என எண்ணினான். அவர் அருகில் சென்றான்.

**பக்தன்:** ஐயா பெரியவரே! உமக்கு வணக்கம்!

**பெரியவர்:** குழந்தாய்! நலம் பெறுவாய்.

**பக்தன்:** நான் நலமாகத்தான் இருக்கிறேன். தாங்கள்தான் நலம் பெற ஒன்றும் தேடாமல் இருக்கிறீர்கள். அதை தாங்களிடம் உணர்த்தவே அடியேன் வந்தேன்.

**பெரியவர்:** தம்பி! மிகுந்த நன்றி. யாம் நலம் பெற என்ன செய்ய வேண்டும்? சற்று விளக்கமாக சொன்னால் பணிவுடன் ஏற்கிறோம்!

**பக்தன்:** தாங்களுக்கு வயது என்ன இருக்கும்?

**பெரியவர்:** வயதா? யாருக்கு?

**பக்தன்:** இது என்ன ஐயா வேடிக்கையான பதில். வயது உங்களுக்குத்தான் கேட்கிறேன். இங்கு நாம் இருவர் தானே இருக்கிறோம். நான் கேட்டால் எதிரில் இருக்கும் உங்களைத்தான் கேட்க முடியும்? இங்கு மூன்றாவது நபர் யாரேனும் இருக்கிறார்களா?

**பெரியவர்:** இரண்டே இல்லையே! அப்புறம் மூன்றாவது நபர் எங்கிருந்து முளைப்பார்? நீ உன்னைத் தனியாக இருப்பதாக எண்ணுகிறாய். அதனால் எம்மையும் உன்னையும் ஒன்றுபடுத்த முடியவில்லை. உன்னை ஒரு ஜீவனாகக் கருதுகிறபடியால் எம்மையும் உன்னையும் ஒன்றாக அதாவது ஆத்மாவாக உணர முடியவில்லை போலும்? அதை காலப் போக்கில் உணர்வாய். யாம் பிறந்தால் அல்லவோ எம் இருப்பையும் வயதையும் கூற முடியும்? சரி சரி ஏதோ நலம் பெற வழி சொல்ல வந்தாயே அந்த நலத்தைச் சொல்வாயா? காட்டுவாயா? உணர்த்துவாயா?

**பக்தன்:** ஐயா! என்னைப் போட்டு குழப்பாதீர். நீர் ஓர் பழைய கால பஞ்சாங்கம். முழு முண்டமாக என் முன் நின்று கொண்டே பிறக்கவில்லை, இருக்கவில்லை என்று என்னிடம் கதை அளக்க வேண்டாம்! உமக்கு இப்போது ஓர் ஐம்பத்தி ஐந்து முதல் அறுபது வரை வயதிருக்கும். இந்த அறுபது வயது வரை நீர் என்ன சாதித்தீர்? எவராவது ஏதாவது கொடுத்தால் நல்லா சாப்பிடுகிறீர். உட்கார்ந்தே தூங்குகிறீர். உம்மையும் என்னையும் இந்த அகில உலகங்களையும் படைத்த ஒருவன் இருக்கிறான், அந்த இறைவனைக் காண வேண்டுமென்று ஓர் நாளாவது எண்ணியதுண்டா? அந்த கருணைக் கடலை, ஆபத்பாந்தவனை; தீன பந்துவை; கூப்பிட்ட குரலுக்கு ஓடி வரும் எம் பெருமானை என்றாவது கண்டதுண்டா? காணத்தான் முயற்சி செய்ததுண்டா?

***பெரியவர்:*** குழந்தாய்! நீ நல்லவன்! சிறந்த பக்தன்! நீ நல்ல வார்த்தைகளையே சொன்னாய்!! எமக்குப் **புத்தி** இல்லை. நீ புத்திசாலி! (கற்பனை வழியில் செல்பவன்) யாம் ஏதும் இல்லாத ஓர் பரதேசி! எமக்கு இந்த காண்பான், காட்சி, காணும் பொருள் இந்த வி(அ)வஸ்தையே தெரியவில்லை. நீ சொல்லும் பகவான் எம்மை இப்படி **ஒன்றுமே இல்லாமல்** ஆக்கிவிட்டான். உன்னை உருப்படியாக (நாம ரூபத்தோடு) வைத்திருக்கிறான் போலும்? நீ அந்த ஸ்ரீ பகவானை தினமும் காண்பதாகவும், கூடிக் குலாவி பேசி மகிழ்வதாகவும் சொல்லக் கேள்வி. யாம்தான் ஒன்றும் உதவாதவனாயிற்றே! நீ நாளை

அந்த பகவான் வந்தால் எமக்காக ஓர் உதவி பண்ணுவாயா?

**பக்தன்:** நான் யார் யாருக்கெல்லாம உதவி பண்ணியிருக்கிறேன் தெரியுமா? மந்திர தீட்சை கொடுத்திருக்கிறேன்; தியான முறையைக் கற்றுக் கொடுத்திருக்கிறேன்; அனுஷ்டான ஆச்சார முறைகளைக் கற்றுக் கொடுத்திருக்கிறேன்; நாம சங்கீர்த்தனம் பஜனை முதலியன முறையாகப் புகட்டியிருக்கிறேன்; பகவானை அடையவும் அவன் தரிசனம் கிடைக்கவும் வழிமுறைகளைப் போதித்திருக்கிறேன். நான் செய்யாத காரியம் எதுவும் இல்லை **என்னால் பயன் பெற்றோர்** கணக்கிலடங்கார். இந்த வயதான காலத்தில் உமக்கு உதவாமல் இருப்பேனா? என்ன வேண்டும்? கேளும்.

**பெரியவர்:** அப்பப்பா! நீயே பகவானுக்கு அடுத்த ஸ்தானம் வகித்துக் கொண்டாய் போலும்? பலே! பலே! பேஷ்! பேஷ்! யாம் சொல்ல வந்தது.....?

**பக்தன்:** என்னிடம் சொல்ல என்ன தயக்கம்? என்னிடம் சொல்வதும் பகவானிடம் சொல்வதும் ஒண்ணுதான்! சீக்கிரம் சொல்லும்.

**பெரியவர்:** வேறு ஒன்றும் இல்லை. நாளை பகவானை பார்த்தால் எமக்கு **"முக்தி"** உண்டா இல்லையா? என மட்டும் கேட்டு வா.

பக்தன் கடகடவெனச் சிரித்தான்! குலுங்கி குலுங்கி சிரித்தான்! விழுந்து விழுந்து சிரித்தான்! வயிறு வலிக்க சிரித்தான்!!

**பக்தன்:** **நல்ல ஆளையா நீர்!** என்ன கேள்வியை கேட்டீர்? உமக்கு முக்தியா!!! ஒரு சாதனையும் பண்ணாத உமக்கு முக்தியா? பகவான் நாமாவையே உச்சரித்தறியாத உமக்கு முக்தியா? நீர் என்னிடம் மந்திர தீட்க்ஷை வாங்கி, பல வருஷம் பஜனை, நாம சங்கீர்த்தனம் பண்ணி, கண்ணீர் விட்டு அழுது, நீர் பக்குவப் பட்டாலல்லவோ பகவான் காட்சியும், என் போன்ற பக்தர்களுக்கு பல வருஷம் சேவை செய்தால்தான் முக்தியும் கிடைக்கும்! வெறுமனே சாப்பிட்டு, தூங்கி, வீண் காலம் போக்கிவிட்டீர். உமக்கும் வயது ஆகிவிட்டது. "காடு வா வா என்கிறது வீடு போ போ என்கிறது". உமக்கு வீடு, குடித்தனம் இல்லாவிட்டாலும் இந்த ஆலமர பொந்து உமது வீடுதானே? ஊர் ஜனங்கள் உம் குடித்தனம் தானே? இதையெல்லாம் எப்படி விடப்போகிறீர். என் போன்று சந்நியாச தீட்சை என்று வாங்கப் போகிறீர்? இதற்கெல்லாம் **உமக்கு வயது பத்தாது.** இன்னொரு ஜன்மா எடுத்து என் போன்று பக்தி பண்ணி பகவானை அடைந்துபின் முக்தியை அடைவீராக! என **"நானே உமக்கு ஆசி வழங்கிவிட்டேன்"**

அவர் பதிலுக்குக் காத்திராமலே அவன் ஆஸ்ரமம் போய்விட்டான். பெரியவரும் சிரித்துக் கொண்டே "பாவம் அறியாமையின் குழந்தை! இனி அவன் கிருபையினால் அறிவு பிரகாசிப்பதாக" என ஆசி வழங்கினார்!!

அன்று இரவு ஸ்ரீ பகவானை வேண்டி உருகி அழுதான். எம் இறைவனும் அவன் பக்திக்கு இறங்கி காட்சி கொடுத்தான். காட்சி கொடுத்த ஸ்ரீ பகவான் விகடமாக சிரித்துக் கொண்டே கேட்டான்.

**பகவான்:** இன்று ஏதேனும் விசேஷமுண்டா?

**பக்தன்:** அப்படி ஒன்றும் விசேஷமில்லையே! ஹே பரமாத்மா! இது என்ன புதுக் கேள்வி? நீர் அறியாதது ஒன்றுண்டா? எதையும் காலம், இடம், பக்குவம் அறிந்து செயலாற்றுபவர் நீர்! விசேஷம் என்ன என என்னிடம் கேட்டால் என் வாயைக் கிண்டிப் பார்க்கிறாயா?

**பகவான்:** உன் வாயை ஏன் யாம் கிண்ட வேண்டும்? அதைத்தான் நீயே கக்கி விட்டாயே அதாவது காலம், இடம், பக்குவம் என அது எங்கு இருக்கிறது, எங்கு இல்லை என சரி பார்த்தோம்!

**பக்தன்:** (பகவான் அறியாமல் தன் விரலைக் கடித்தான். பகலில் நடந்த விஷயம் பகவான் அறிவானோ? உளற ஆரம்பித்தான்.) அந்த பெரியவரிடம் சற்று நேரம் பேசிவிட்டு வந்துவிட்டேன். விஷயம் ஒன்றும் பெரிதில்லை.

**பகவான்:** (தெரியாதபடி நடித்துக் கேட்டான் பகவான்) எந்த பெரியவர் எங்கே இருக்கிறார்?

**பக்தன்:** (தன்வீட்டு சாளரத்தை திறந்து காட்டி) அதோ அந்த மரத்தடியில் கண்ணை மூடி தூங்குகிறாரே அவர்தான்!

அந்த பெரியவர் அமர்ந்திருந்த திசையை நோக்கி சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தான் இறைவன்!

**பக்தன்:** இது என்ன வினோதம்? நீ அவருக்கு ஏன் நமஸ்காரம் செய்ய வேண்டும்? அவர் நெற்றியில் நாமமும்

இல்லை, விபூதியும் இல்லை. எந்த பகவான் நாமாவும் அவர் சொல்லவும் இல்லை. ஓர் நாஸ்திகனைப் போய் (மேலும் வ்ார்த்தை வராமல் பக்தன் வாயைப் பொத்தினான் பகவான்)

***பகவான்:*** அபசாரம் தேடிக் கொள்ளாதே! பின் உனக்காக யாம்தான் பரிஹாரம் பண்ண வேண்டும். **அவர் ஓர் மஹான்.**

***பக்தன்:*** அவர் மஹான் என்றால் **நான் யார்?**

***பகவான்:*** நீ ஒரு பக்தன்

***பக்தன்:*** ஓர் மஹான் என்றால் காவி உடை வேண்டும்; விபூதி அல்லது நாமம் அணிந்திருக்க வேண்டும்; ருத்ராட்சம் அல்லது துளசி மணி மாலை அணிந்திருக்க வேண்டும்; கையில் யோக தண்டு; கமண்டலம், புலித்தோல், அல்லது மான்தோல் வேண்டும் அவர்கள் ஆச்சார சீலர்களாக இருப்பார்களே! இவர் அப்படி இல்லையே.

***பகவான்:*** நீ இன்னமும் பக்குவப்படவில்லை, அதனால் நீ அவரைப் பற்றி உணர முடியவில்லை.

***பக்தன்:*** அந்த பக்குவம் அடியேனுக்கு எப்போ கிடைக்கும்?

***பகவான்:*** சீக்கிரம் கிடைக்கும். அது சரி அவர் உன்னிடம் என்ன கேட்டார்?

***பக்தன்:*** அவர் கேட்ட மாதிரியே கேட்கிறாயே! அவர் அவருக்கு முக்தி உண்டா, இல்லையா என கேட்டார்.

**பகவான்:** அவருக்கு முக்தி உண்டு எனச் சொல்வதைவிட, அவர் முக்தியாகவே, மோட்ச சொரூபமாகவே இருக்கிறார்

எனச் சொல்லிவிட்டு பகவான் மறைந்து விட்டான்.

பக்தன் யோசித்தான். நாம்தான் அவர் நிலையை உணராமல் பேசிவிட்டோம் போல் தெரிகிறது எனத் தன் தவறை உணர்ந்து மறுநாள் காலையில் அவரிடம் சென்று முதலில் வணங்கினான். பின் ''ஐயா பெரியவரே! தாங்களுக்கு, முக்தி உண்டு என பகவான் சொல்லிவிட்டார். நேற்று உம்மிடம் தரக்குறைவாகப் பேசி விட்டேன். அதற்கு என்னை மன்னிக்க வேண்டும்'' என வேண்டினான். அவரும் அவனை தடவிக் கொடுத்து, யாம் மன்னிக்கக் கூடிய அளவுக்கு நீ எந்த தவறும் செய்யவில்லை என சொல்லி, குழந்தாய்! நீ இன்று இரவும் உன் பகவானிடம் உனக்கு முக்தி உண்டா? இல்லையா? என கேட்டுவிட்டு **எம்மிடம் வா!** உனக்கு சில விளக்கம் தருகிறோம் என்றார்!

அந்த பக்தனிடம் இன்று ஆர்ப்பாட்டம் இல்லை. அமைதிதான் குடியிருந்தது. ஆனால் இந்த கேள்வி அவனை பெரிதும் வாட்டியது. **நமக்கு முக்தியா? இல்லையா?** என்றால் இதுவரை நான் செய்த பக்தி, பூஜை, புனஸ்காரம், ஆராதனை, அபிஷேகம், ஆரத்தி, பஜனை நாம சங்கீர்த்தனம் இவை எல்லாம் **முக்திக்கு வழி** இல்லையா? என பெரும் போராட்டமே அவன் உள்ளத்தில் நடந்தது போலும்! இரவு பூஜை அறையில் ஓர் ஓரமாக சாய்ந்தான். கண்ணீர் மாலை மாலையாக ஓடிக் கொண்டிருந்தது. இவன் அழைக்காமலே பகவான் காட்சி தந்தான், வந்த உடன் பக்தனை ஓர் குழந்தையெனயெடுத்து தன் மடி மீது இருத்தி வஸ்திரத்தால் அவன் கண்ணீரைத் துடைத்தான்.

**பகவான்:** குழந்தாய்! இன்று என்ன ஆயிற்று? ஏன் இப்படி சோர்ந்து போய்விட்டாய்?

பக்தன் பகவான் மடியை விட்டு கீழே இறங்கினான். பகவான் எதிரில் அமர்ந்தான்.

**பக்தன்:** எம் கமல நயனா! நேற்று அவருக்கு முக்தி என்றும் அவர் முக்தி ஸ்வரூபம் என்று சொல்லிவிட்டாய்! அவர் எனக்கு முக்தி உண்டா இல்லையா எனக் கேட்டு வரச் சொன்னார்.

## *அவர் வார்த்தையும், உன் பார்வையும்,*

நான் உணரும்போது நீ உன் திருவாய் மூலம் சொல்லாமலே **"எனக்கு முக்தி இல்லை"** எனத் தெளிவாகிவிட்டது. ஏன் இந்த கபட நாடகம்? இப்படி நீ செயல்பட்டால் எவர் உன்னை பக்தி பண்ணுவார்? **"ஆசை காட்டி மோசம் செய்வதைப் போலும்; உறவாடி கெடுப்பதைப் போலவும்"** அல்லவா தோற்றுகிறது.

## *இதன் அந்தரங்க விஷயம் என்ன???*

## *அந்த ரங்கனே பதில் சொல்கிறான்!!*

கேளுங்கள்

**குழந்தைகளே:** உணர்ந்த பக்திக்கும், அனுபவ ஞானத்திற்கும் முறையாக நிஷ்காமிய **கர்மா;** பரா **பக்தி;** கடும் **வைராக்கியம்;** அனுபவ **ஞானம்** என நான்காக ஸ்ரீ மஹான்கள் பிரித்து வைத்து **படிப்படியாக** முன்னேறி பிரம்மானந்தமாகிய **சகஜானுபூதியை** அடைந்து **"அது நாம்"** என நிலை பெற்றார்கள்!

1. ***நிஷ்காமிய கர்மா:-*** உலகியல் ஜீவர்கள் பாடுபட்டால் பலன், பணம், பதவி என்றும், வேலை செய்தால் கூலியென்றும் கர்மா செய்கிறார்கள். இது அவரவர் **விகிதாச்சாரப்படி** அதாவது விதிக்கப்பட்ட கர்மாவின்படி ஒழுங்காக நடைபெறுகிறது. இதில் பாரபட்ச தோஷம் இல்லவே இல்லை. பூர்வ புண்ணியமும், ஸ்ரீ மஹான்கள் தரிசனமும், ஸத்சங்கமும் ஒரு பக்குவ ஆன்மாவை மேலும் மேலும் பக்குவப்படுத்தும். உலகியல் கர்மாவின் **மோஹத்தைத்** தணிக்கும். சொந்த பந்த உறவுகளை **அணு அணுவாக சிதைக்கும்!** ஸத்சங்கமும் சாதுக்கள் வாசகமும் **இறை உணர்வை ஊட்டும்!** இதனால் அனைத்தும் **அவன் உடைமையே** என்பது அனுபவம் ஆகும்போது முடிவில் **அனைத்தும் அவனே** என்பது உறுதியாகும். இதனால் சொந்த ·பந்த உறவு மீதும் தொழில் மோஹத்தின் மீதும் பிடிப்பு அறும்போது,

***"பிராப்தகர்மா நடைபெறும்";*** **ஆசைவசப்பட்ட கர்மா** தாமாக நின்றுவிடும். ஆசைவசப்பட்ட கர்மாவை ஆகாமிய கர்மா என சொல்வதுண்டு. ஆகாமிய கர்மாவே அடுத்த **பிறவிக்கு வித்து** ஆகும். **"அனைத்தும் அவனே"** என்ற பிடிப்பினால் ஆகாமிய கர்மா குறைந்து குறைந்து நிற்கும்போது, கர்மாவினால் வரும் சந்தேகம், கஷ்டம், கவலை, பயம் இவை நீங்கிப் போகும். எதைக் கண்டாலும், எதைக் கேட்டாலும் இறைவனே அனைத்தும் என்ற பேருணர்வு உண்டாகும்போது கர்மாவின் வேகம் உன்னைப் பற்றாத காரணத்தால் **நிஷ்காமிய கர்மா** தாமாக நடைபெறுகிறது என நீ உணரலாம்!

2. ***பராபக்தி:-*** இறைவனின் சூட்சுமமான தோற்றத்திற்கு **நாமரூபம்** கொடுக்கப்பட்ட நீ; நாமரூப, குணம், குறி கடந்த

காலாதீத அந்த **ஒன்றான ஸ்ரீ பரசொரூபமே** நம் இறைவனாக இருக்கிறது; அதற்கு இது அன்னியமில்லை என்று உறுதியில் **பூரண நம்பிக்கை** வேண்டும். இந்த பூரணத்வம் பெருக பெருக அந்த இறைவனின்

***"மாயா சொரூபத்தின் மீதும்; மாயா காரியத்தின் மீதும்; மோஹமும், பயமும் அவஸ்யம் அறுபடும்"***

கண்துயில் கனவில் ***"கண்கண்ட"*** காட்சி; என உறுதியாகும். அதாவது கனவுக் காட்சி எப்படி முக்கியம் இல்லையோ, அதேபோல் இந்த காட்சி முக்கியம் இல்லை என்பது உண்மையாகிவிடும்! நாம் நாமரூபத்தோடும், அனந்த கல்யாண குணங்களோடும் வழிபடும் இறைவன் **காரண சொரூபமான** அந்த பரஸ்வரூபத்தில் இருந்து **நமக்காக** வந்த **காரிய ஸ்வரூபம்** என உறுதி நிச்சயம் வேண்டும். உன் பூஜை, அபிஷேகம், ஆராதனை, ஆரத்தியைவிட ***"உன் கண்ணீரே"*** அவன் காணிக்கையாகும். பரசொரூபம் சமுத்திரமாகும்; இறைவன் அதில் ஒரு குட ஜலமாகும்; நாம் அதில் ஒரு குவளை ஜலமாகும் என உறுதி நிச்சயம் வேண்டும். இறைவன் சீல் வைக்காத குடம்; நாம் சீல் வைத்த குவளை; அந்த சீல் என்பது நான் என்ற அஹங்காரமும், என்னுடையது என்ற அபிமானமும் ஆகும் என உறுதி கொண்டு **உன் சீலை உடைப்பாயாக!** உன்

***"சீல் உடைந்த மறுகணம் இறைவனும் நாமும் ஒன்றுதான் என்ற உணர்வை"***

நீ பெற முடியும். இதுவே பராபக்தி மற்றும் உள்ள பக்தி அனைத்தும்

## *"உபசார பக்தி; விளம்பர பக்தி; வியாபார பக்தியாகும்"*

3. **கடும் வைராக்யம்:-** வைராக்கியமும், யோகமும் ஒரு நிலையில் ஒன்றாகும்; ஆனால் சாதனையில் இரண்டாகும். யோகம் என்றால் பிராணனை அடக்கி ஓர் நிலைப்படுத்தி மனதை சாந்தி சமாதானத்தோடு **மனோ நாசம்** (மனதை மஹத்தாக்குவது) செய்வதாகும். வைராக்கியம் என்பது "நாமரூபத்தை மறக்கச் செய்து அதன் **குணாதிசயங்களை** இறக்கச் செய்வதாகும்". இதன் சுருக்கம் என்னவென்றால் **சர்வசங்கப் பரித்தியாகமே!** "சரணாகதியே" பூரண (கடும்) வைராக்கியமாகும்!

## *"யோகம் என்றால் கட்டுதல்"*
## *"தியாகம் என்றால் விடுதல்"*

இந்த இரண்டிற்கும் **வைராக்கியம்** அவசியம் வேண்டும். செயல்முறையில் கொஞ்சம் மாற்றம் அவ்வளவுதான். உலக நிலையில் நாமரூப குணங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக **வலு இழக்கச் செய்து** ஆசைகளை விடுதல் (துறத்தல்) ஆகும். இதற்காகத்தான் நம் முன்னோர் சொல்லி வைத்தனர். அதாவது உலக நாமரூப பொருள் ஜடம்; அது அறிவற்றது. அதை அசைப்பதும், அழகு, கவர்ச்சி, வசீகரம், மதுரம் ஆகியவைகளை உண்டு பண்ணுவதும் **மாயையாகும்!** அப்படியானால்

***உலகம் ஜடம்*** அதாவது ***அறிவற்றது;*** அதாவது **அவித்தை; மாயை - இல்லாததை இருப்புடைய தாக்குவது!** அதாவது அவித்தையாகிய உலகை இருப்புடையதாக்கியது

மாயை என நன்கு உணர வேண்டும். அப்படியானால் அவித்தையாகிய உலகை அதை உண்டாக்கிய மாயையிடம் (இறைவன்) அப்படியே விடவேண்டியதுதான் முறை!! "எந்தக் **கேள்வியும் பதிலும்** ஆகாது" நீயோ பரம்; இல்லாததை இருப்புடையதாகக் காட்டிய இறைவனும் (மாயையும்) பரமே!! உங்கள் இருவருக்கும் மத்தியில்

***"எண்ணமாகிய*** அதாவது ***மனமாகிய"***

**திரையும் பரத்தினுடையதே!** அது நீயே!

**ஜீவன் நான் என்றும்; நாமரூபங்களையும் குணாதிசயங்களையும் என்னுடையது என ஒரு திரையாக்கிப் போர்த்திக் கொண்டாய்.** இது யார் குற்றம் என்றால் ஜீவன் என்ற பெயர் சூட்டிக் கொண்ட பரத்தினுடையதும் அல்ல; இறைவன் என்ற பெயர் சூட்டிக் கொண்ட பரத்தினுடையதும் அல்ல; சுத்த பிரம்மானந்த சமுத்திரமாகிய பரத்தினுடையதும் அல்ல;

## ***இந்த மூன்றும் ஒன்றே!!!***

**மாயை** என்ற குற்றம் முக்காலத்திலும் இல்லையென உன் நிதித்தியாசனத்தால் தெளிக. இதில் உன் **கடும் வைராக்கியம்** எப்படி இருக்க வேண்டும் என்றால்

## ***"லௌகீகத்தைக் கண்டு மயங்காதே"!***
## ***"தெய்வீகத்தை எண்ணிக் கலங்காதே"!***

உலகம் அழகால் உன்னை மயக்கும். தெய்வீகம் உன்னை **அசகாயசூர** சக்தியினால் பயமுறுத்தும். இந்த இரண்டும் இல்லாததே! ஆனால் இருப்பது

# ***ஒன்றே! அது நீ!! நீயே அது!!!***

4. **அனுபவ ஞானம்:-** இதற்குத்தான் அளவற்ற **"பொறுமை"** வேண்டும். அது தாமாகப் பழுக்க வேண்டுமேயன்றி தடிகொண்டடித்து (ஊத்தம் போட்டு) பழுக்க வைக்கலாகாது. இங்கு கடும் வைராக்யம் பயனற்றதாகிவிடும்.

ஆரம்பத்தில் மறைபட்டு மறைபட்டு (விட்டுவிட்டு) பெறும் ஆனந்தம் எந்த வினாடியும் அதாவது மூன்று அவஸ்தைகளிலும் - **"அவஸ்தை தோற்றாது"** - ஆனந்தம் ஒன்றே தோன்றும். தனக்கு அன்னியமாக ஒன்று தோற்றும்போது இது ஏன் எப்படி??? என கேள்வி உண்டாகி, சந்தேகமும், சந்தேகத்தால் கலக்கமும், கலக்கத்தால் பயமும் அவசியம் தோற்றும். ஒன்றென்ற அனுபவத்தில் "உலக நாமரூப குணாதிசயங்களோ; **தெய்வ நாமரூப மயக்க மகிழ்ச்சிகளோ** கண்டிப்பாக தோற்றாது! தோற்றவும் முடியாது!! அப்படி தெய்வீக காட்சி மயக்கம் தோற்றினாலும், **செத்தாட்டு கண்ணைப் போல்** இருப்பான் சகஜ ஞானி. இவன் அனுபவத்தைச் சில பக்குவ ஆன்மாக்களிடம் பகிர்ந்து அந்த அனுபவத்தை உணர்த்துவது என்றால் **"குழந்தையை மயக்கி நிலாச்சோறு ஊட்டுவது போல்"**

## ***"தற்காலிக அனுபவ பொய்யாக"***

இருக்குமே தவிர அது உண்மையாகாது. அப்பொய்யும் அந்த பக்குவ ஆன்மாவின் அனுபவத்திற்கு **அடிகோலியாக** இருந்து பின் தடயம் இல்லாமலே மறைந்துவிடும். இது **அனுபவ ஞானிக**ளுக்குத்தான் பொருந்துமே தவிர சாஸ்திர வாய் ஞானிகளுக்குப் பொருந்தாது. அனுபவ ஞானிகளிடம் பேசும் போதும், விளக்கம் கேட்கும் போதும் உள்ளம் நெகிழும், **நம்**

**அனுபவ நிலையாக** ஓர் பரவசம் உண்டாகும், நாம் பெற்று விட்டோம் என்ற ஓர் நிறைவு உண்டாகும்!

ஒரு முடிவு!

1. **"நாம் கேட்டு அவர்கள் தருவதாக இருந்தால் இன்னமும் நாம் பக்குவப்படவில்லை"** எனக் கொள்க!
2. **அவர்கள் கொடுத்து நாம் பெறுவதாக இருந்தால் நாம் நிறைநிலை பெற்றுவிட்டோம்** எனக் கொள்க!
3. **ஏக்கம் வேண்டும்; வேகம் வேண்டாம்!**
4. **அவர்கள் கொடுக்கும் வரை பொறுமை வேண்டும்!**
5. **இனி ஜன்மா இல்லை! பெற்று விட்டோம்** என்ற **முடிவு** அவசியம் வேண்டும்!

ஆனால் இது கொடுப்பதும் இல்லை; வாங்குவதும் இல்லை; காண்பதும் இல்லை; காணும் வஸ்துவும் இல்லை; நீ போவதும் இல்லை; அது வருவதும் இல்லை.

**அதுவே நீ** ஆனால் **திரை விலகும்** வரை காத்திரு!

**பொறுமையே** உன் சொரூபம்!!

இதுவரை கேட்ட பக்தன் ஆடவில்லை, அசையவில்லை. கற்சிலையாக அமர்ந்திருந்தான். அவன் உள்ளம் ஈரத்துணிபோல் **பிழியப்பட்டு,** கண்களில் கண்ணீர் அருவி கொட்டிக் கொண்டிருந்தது. இவன் கண்ணீரால் உள்ளம் கழுவப்பட்டு ஸ்படிகம் என ஆனது போலும்?

**பகவான்:**-எம் குழந்தாய்! இதுவரை யாம் சொன்னது எம் சொந்தக் கருத்து அல்ல. மகரிஷிகளும், பிரம்ம ரிஷிகளும், இல்லற ஞானிகளும் அவர்கள் உத்தம சீடர்களுக்கு முடிவாகச் சொல்லும் ஞான வாசகமாகும். யாம் ஆங்காங்கே வடிக்கப்பட்ட சிலாரூபமாக இருந்தாலும், இப்படி **அனுபவ ஞான சாரம்சத்தைப்** பருகுவோம். அப்போது யாம் எண்ணுவதுண்டு - யாமும் இப்படி உத்தம சிஷ்யனாய் மனுஷ்ய ஜன்மா எடுக்கவில்லையே! அப்படி எடுத்திருந்தால் நாமும் பரத்தோடு கலந்து "**சும்மா**" இருக்கலாமே! இப்படி திரிகர்த்தாவாக இருந்து என்ன பயன்? ஜீவன் அவித்யாவாதி, நாம் மாயாவாதி. **அவன் அவித்தைக்குள் அகப்பட்டு சிக்கித் தவிக்கிறான். யாம் மாயையை வைத்து ஆட்டி ஆட்டி தவிக்கிறோம். அவன் அனுபவ ஞானம் பெற்றால் உடனே ஓடி விடுகிறான். யாம் எங்கு ஓடுவது? ஜீவனுக்காக இருந்தேயாக வேண்டும். அவனுக்கு ஓர் நொடியில் முக்தி கிடைத்து விடுகிறது.** எமக்கு 48 சதுர்யுகம் முடிந்தால் தான் முக்தி!!!

என சலித்துக் கொண்டான் பகவான்!!!

**பக்தன்:** பிரபோ! தாங்கள் சொன்னவை அனைத்தும் எம் உள்ளத்தில் பசு மரத்தாணி போல் பதிந்துவிட்டது. ஹே சூஸ்திரதாரி! பல காலம் உன் தரினசமும், ஸ்பரிசமும், உன் விளையாட்டும் அனுபவித்தோமே! **இந்த உண்மைகளை** ஏன் இதுவரை எமக்கு உணர்த்தவில்லை?

**பகவான்:** காலம் கனியட்டும் என காத்திருந்தோம். காலம் கனிந்தது. **கைகாட்டியைக்** காட்டிக் கொடுத்தோம். எம் பணி முடிந்தது இனி உன் (சத்குரு) பணியை ஆரம்பிப்பாயாக!

பகவான் எழுந்து செல்ல முயன்றான்.

**பக்தன்:** (அவன் திருவடியைப் பற்றி) ஒன்று கேட்கிறோம். அதன் விளக்கம் கூறிவிட்டு செல்.

**பகவான்:** இனி உன் விளக்கம் அங்கேதான் **"அதுவும் இதுவும் ஒன்றே"**

எனச் சொல்லி மறைந்தான்.

பக்தன், பகவான் மறைந்ததற்காகவும் அந்த காட்சிக்காகவும் வருந்தவில்லை. நம் அருகிலேயே ஸ்ரீ குருதேவர் இருந்தும் இத்தனை காலமும் அவலமாக்கி விட்டோமே என வருந்தினான். பிறகும் தேற்றிக் கொண்டான். **"காலம் கனிந்தது கைகாட்டியைக் காட்டினோம்"** என்றானே இதுபோதும். **உள்ளம் தெளிந்தது.**

மறுநாள் புஷ்பம், பழம் முதலியவை ஒரு தட்டில் ஏந்தி ஸ்ரீ குருதேவர் முன் நின்றான். இதுவரை வயதான ஓர் கிழவனாகக் காட்சி தந்தவர், அன்று லோக குரு தட்சிணாமூர்த்தியாக காட்சி தந்தார்.

***சத்சீடன்:*** ஹே குருதேவா! இது காலப் பரியந்தம் எந்த குற்றம் குறை செய்திருந்தாலும் மன்னீப்பீராக!

***சத்குரு:-*** குழந்தாய்! நீ எந்தத் தவறும் செய்யவில்லையே!

***"உனக்காகவே யாம் காத்திருந்தோம்"***

யாம் வந்த காரியம் உனக்கே!

உன் கடன் **பணி** செய்வது! எம் கடன் எம்மோடு உம்மைக் **கரைத்துக் கலப்பது!!** அவனும் யாமும் ஒன்றே! நீ **வேற்றுமையான எண்ணத்தை** வைத்திருக்கிறாய், அதைவிட்ட மறு க்ஷணம் **நீயும் யாமும் ஒன்றே!**

அவன் கூறிய ஞான வாசகம் அனைத்தும் ஸத்யமே!!

அவன் மூலமாக யாமே உணர்த்தினோம்! அவன் உன் **வினையைப் போக்கிவிட்டான்.** யாம் உன் அஞ்ஞானத்தை அதாவது அறியாமையை அதாவது **கவனக் குறைவைப்** போக்குகிறோம்.

***சத்சீடன்:*** ஹே தயாநிதி! ஹே சத்குரு வார்யா!! அந்த ஸ்ரீ பகவத் சொரூப தரிசனம் பல வருஷங்களாகப் பெற்றும் அது **பயனற்றது போல்** தோற்றுகிறதே காரணம் என்ன?

**சத்குரு:** அதை அப்படி எண்ணவும் கூடாது சொல்லவும் கூடாது!

**"அவன் நாள் காட்டி! யாம் கை காட்டி"** அதாவது உன் காலம் கனிவதற்கு, வினை பக்குவப்படுவதற்கு, மனதில் உடல் உலக எண்ணம் மறைவதற்கு, **சத்வகுணம் நிறைவதற்கு** இறை கிருபைதான் அவசியம் முதலில் வேண்டும். பணிவு, அடக்கம், சேவை, நன்னடத்தையினால் உன் காலம் கனியும்போது உள்ளம் பரிபாகப்படுகிறது. அதாவது உள்ளம் கனியாகிறது எனச் சொல்லலாம்!

"கண்ணனின் பக்குவம் கனிய வைக்கும்"!

"சத்குருவின் பக்குவம் சுவையை கொடுக்கும்"!

மரத்தில் இருந்தால்தான் பழம் பழுக்கும்!

மரத்தைவிட்டு எடுத்தால்தான் பழம் சுவைக்கும்!

***பழம் பக்தி! சுவை ஞானம்!!***

குழந்தாய்! நீ பகவத் பக்தி நிலையில் பாடினாய்; ஆடினாய்; கூட்டத்தோடு கூடினாய்; பாகவத சேவை செய்தாய் இதனால்,

***உன் ஆகாமிய கர்மா பெருகாமலும்;***

***பிராரப்தகர்மா வலு இழக்கவும்;***

இறையருள் உன்னை ரட்சித்தது. இனி நீ ஈடுபடும் சத்குரு சேவையும்; ஆன்ம ஞான உணர்வும்;

***உன் சஞ்சித கர்மாவை எறிக்கும்!***

***உன் அஞ்ஞானத்தைப் போக்கும்!!***

உன் பஜனை, ஆராதனை, ஆரத்தி, பாகவத சேவை, பகவத் சேவை, ஸ்ரீ பகவான் தரிசனம் ஆகிய இவை அனைத்தும் **உன் சத்கர்மாவில் முடிந்துவிட்டது!**

***பாடுபட்டாய் பலனை அனுபவித்தாய்!***

***ஞானத்திற்கு என்ன செய்தாய்???***

அதாவது

தன்னை அறியும் அறிவை அறிய நீ என்ன செய்தாய்? இதை **எந்த கர்மாவினாலும்** பெற முடியாதே! கர்மாவை விட்டாலல்லவோ நீ அது ஆக முடியும்! **கர்மாவை நீ விட முடியாது! கர்மா உன்னை விட வேண்டும்!!**

***கர்மாவை நீ விட முடியாது:-*** இப்போது நீ உன்னை **உடம்பாக பாவனை** செய்து கொண்டிருப்பதால் உடம்பு கர்மாவை விட முடியாது.

***கர்மா உன்னை விட வேண்டும்:-*** உடம்பின் கர்மாவை **இந்த மாயாமனம்** தனதாக பாவனை பண்ணுகிறதல்லவா? அந்த **உடம்பையும்** அதன் **கர்மாவையும்**

***உன் மாயா மனம் விட்டால்;***

கர்மா உன்னை விடும். அதாவது தோட்டி வேஷம் போட்டு நாடகம் ஆடும் பிராமணன், நாம் பிராமணன் என சதா எண்ணத் தேவை இல்லை. வேஷம் கலைந்ததும் பிராமணனாகவே இருப்பான். அதுபோல **கர்மாவையும்,** கர்மாவின் **தன்மையையும்,** கர்மாவின் **பலனையும்** எந்த வினாடி

***இந்த ஜீவன் நானும் அல்ல,***
***எனதும் அல்ல என்று மனதால் முழுமையாக***
***(எந்த க்ஷணம்) விடுகிறானோ!***

***அந்த க்ஷணமே இவன் ஜீவன் அல்ல***

***ஆத்மாவே இது ஸத்யம்!!!***

**ஒன்றை உணர்:** நீ கண்ணனைக் கண்டாய்! ஆடினாய்! பாடினாய்! கூத்தாடினாய்! ஆலிங்கனம் செய்தாய்! ஆனந்த பரவசத்தில் திளைத்தாய்!

***உனக்கு அன்னியமாய்தானே!***

***"அவனே நீயாய்; நீயே அவனாய்"*** ஆன

**சகஜ நிலை** பெறவில்லையே! கண்ணன் உன் முன் வந்தான்! நீ அவனை **கண்களால்** கண்டாய்! இப்போது

***வந்தவன் இல்லையே!***

***கண்டவன்*** நீ ***இருக்கிறாயே!!***

***கண்கள்*** (மனம்) ***கண்டது!***

***கண்*** (அறிவு) ***உணரவில்லையே!!***

குழந்தாய்! கண்கள் மூலமாக மனம் கற்பனையால் **அழகுபடுத்தி** கண்டது! இதற்கு அறிவு **சாட்சியாக** இருந்தது. கண்களால் கண்ட இந்த மனம் தீட்சண்யமாகி, அறிவோடு கலந்ததா? நன்கு உணர்! இல்லையே! அப்படி உணர்ந்து விட்டால்,

***காணும் பொருளும் இல்லை!***
***காண்பானும் இல்லை!!***
***இதை விளக்கும் மனமும்*** (கற்பனை) ***இல்லை!!!***
***அறிவு*** (ஆத்மா) ***ஒன்றே இருக்கிறது.***

அதை சொல்வது யார்? விளக்குவது யார்? யாருக்கு யார் சொல்வது? யார் யாரிடம் கேட்பது? இப்படி

## பகுப்பற்றுப் போகும் பரம்!!

எத்தனையோ அண்டத்தார் இருந்தவர்கள் எத்தனை பேர் அத்தனை பேர் உண்டாலும் (உணர்ந்தாலும்) அணுவும் குறையான் காண்!

இந்த உண்மையை **"உணர்வாக உணர"**

ஒரு சிறிய கதை!

நீங்கள் கதை கேட்கும் குழந்தைகள். ஆகவே உங்களை

**கதை சொல்லிச் சொல்லி**

தூங்காமல் தூங்கும் **பேருறக்கம்** (அரிதுயில்) கொள்ளச் செய்வோம்! இதில் கண்ணன், பீமன், காண்டீபன், ஒரு கற்பனை பூதம் பங்கேற்கின்றன.

### கேட்ட கதை! உணராத உண்மை!!!

ஒரு சமயம் கண்ணன், காண்டீபன், பீமன் ஆகிய மூவரும் வனத்தில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தனர். இரவு ஆனதும் மூவரும் ஓர் இடத்தில் அமைதியாக நித்திரை செய்தனர். நடு இரவில் ஓர் பூதம் வந்தது. அப்பூதத்தின் காலடி ஓசை கேட்டு காண்டீபன் எழுந்தான். இதை இப்படியே விட்டுவிட்டால் நம் மூவரையும் சாப்பிட்டு விடும் எனக் கருதி அதை போருக்கு அழைத்தான். அதுவும் சம்மதித்து இங்கு போர் செய்தால் வீணாக அவர்களும் விழித்துக் கொள்வார்கள் எனச் சொல்லி அவனை தனியே அழைத்துச் சென்றது. அர்ச்சுனனும் சம்மதித்துச் சென்றான். ஓர் இடத்தில் யுத்த பூமியை நிர்மாணம் செய்தார்கள். முதலில் வில்போர் நடந்தது. அர்ச்சுனன் எந்த பாணம் தொடுக்கிறானோ அதே பாணங்களை அப்பூதம் தொடுத்தது.

அர்ச்சுனன் பாணம் முழுதும் தீர்ந்துவிட்டது. அப்பூதத்தை வெல்ல முடியவில்லை. அடுத்து என்ன செய்யப் போகிறாய் என பூதம் கேட்டது? வாள்போர் செய்யலாம் என்றான். இருவரும் வாட்போர் செய்தனர், அதிலும் அப்பூதத்தை அர்ச்சுனனால் ஜெயிக்க முடியவில்லை. காண்டீபன் உடல் எல்லாம் ரணமாகிவிட்டது. அவன் சோர்ந்து போய் விட்டான். வந்து பீமசேனனை எழுப்பி விஷயத்தை சொல்லிவிட்டு காண்டீபன் தூங்கி விட்டான். இது கண்ணனுக்கு தெரிய வேண்டாம். அவனை எழுப்பி விடாதே. நான் சென்று அதை அழித்து வருகிறேன் என கூறி யுத்த பூமியை அடைந்தான் பீமசேனன். பீமனிடம் நீ என்ன போர் செய்ய வந்தாய் என பூதம் கேட்டது? கதைப் போர் என்றான். அதுவும் கதையை எடுத்து அவனோடு யுத்தம் செய்து, பீமனைச் சோர்வடையச் செய்துவிட்டது. மேலும் அப்பூதம் இனி என்ன செய்வதாக உத்தேசம் எனக் கேட்டது. பீமனும் மல்யுத்தம் செய்து உன்னை அழிக்கிறேன் பார் என மலையோடு மலை மோதுவது போல இருவரும் மோதினர். அந்த பூதத்தை பீமனால் ஜெயிக்க முடியாதபடி ரணகாயத்துடன் வந்து சோர்ந்து படுத்துவிட்டான்.

இப்போது பூதம் கண்ணனைத் தட்டி எழுப்பியது. கண்ணனா தூங்குபவன். அவன் திருடனுள் பக்காத் திருடன். ''என்ன விசேஷம்? ஏன் எம்மை அழைக்கிறாய்?'' என்றான். அந்த பூதம் சொன்னது:- ''அர்ச்சுனனும், பீமசேனனும் அதிபலசாலிகள்; சுறுசுறுப்பானவர்கள்; என் காலடி ஓசை கேட்டே விழித்துக் கொண்டார்கள். நீ ஒரு சுத்த சோம்பேறி. உன்னை எழுப்ப வேண்டியிருக்கிறது. நீ ஆச்சியர்மத்தினால் உதை வாங்கியவன். வீரம் உன்னிடம் சுட்டுப் போட்டாலும் வராது.''

## "என்னைப் பார்; நான் எத்தனை பலசாலி"

இந்தப் பூமியை ஒரு பந்தாக உதைக்கக் கூடிய ஆற்றல் எனக்கு உண்டு. நீ என் **கால் தூசி** ஆக மாட்டாய். எழுகிறாயா? தூங்குகிறாயா?

**கண்ணன்:** யாம் என்ன செய்ய வேண்டும்?

**பூதம்:** என்னோடு யுத்தம் செய்ய வேண்டும்!

**கண்ணன்:** யுத்தம் எங்கு செய்ய வேண்டும்?

**பூதம்:** அதோ அந்த யுத்த பூமிக்குப் போவோம் வா!

**கண்ணன்:** நீ சொன்னபடி யாம் உன் பாத தூசியே!

என சொன்ன வண்ணம் அதைப் பின்பற்றிச் சென்று யுத்த பூமியில் மத்தியில் அமர்ந்த வண்ணம் மோவாய் கட்டையில் இருகைகளையும் ஊன்றிய வண்ணம் புன்முறுவலுடன் அந்த பூதத்தை பார்த்த வண்ணம் குறுநகையுடன் இருந்தான் எம் மாதவன்!

பூதம் ஊங்காரம் இட்டது; கத்தியது; கர்ஜித்தது; பிளிறியது; உறுமியது; ஆகாயத்திற்கும் பூமிக்கும் மேல் அண்டம் முட்டும் அளவுக்கு நின்று கொண்டு பற்பல விகாரமான பல தலைகளுடனும், அனேக கோர ஆயுதம் தாங்கிய நூற்றுக் கணக்கான கரங்களுடனும் குதித்து ஆடித் துள்ளியது. பற்பல தேவதா அஸ்திரங்களை ஏவியது. அவை கண்ணனுக்குள் மயமாகிவிடும்! பற்பல ஆயுதங்களை வீசும். அவைகளும் அவனுள் மயமாகிவிடும். ஈனமான வார்த்தைகளால் வசைமாரி மொழியும் தம் முஷ்டியால் கண்ணனைத் தாக்கும். ஒரு அடியாவது கண்ணன் மேல் படுவதில்லை. **காரணம்!!!**



***கண்ணன் ஒரு மாயாவி;*** என்றோ,

***கண்ணன் ஒரு இறைவன்;*** என்றோ,

***கண்ணன் ஒரு பலசாலி;*** என்றோ,

**எண்ண வேண்டாம்.** எண்ணம், சொல், செயல் ஆக இந்த மூன்றும் அடங்கிவிட்டது என்றால்

**"எதிர் தோற்றத்திற்கு"** இருப்பு இராது.

**எண்ணம்:** எதிரில் தோற்றும் நாமரூபத்தை உனக்கு அன்னியமாகவோ **நானாவித குண சொரூபமாகவோ** உன் கற்பனையை விரித்தால் அது அவ்விதமே ஆகும்.

**எண்ணம்:** எதிரில் தோன்றும் அனைத்தையும் முழுமையாக **இறைவன்** உடைமையாகவோ, **இறைவனாகவோ** எண்ணத்தை மாற்றி இயக்க, சாந்தி, அஹிம்சை, பொறுமை, நன்மை என **சத்வ குணத்தில்** உணரத் தொடங்கிவிட்டால் அங்கு **குற்றம், குறை** கண்டிப்பாக இராது.

**சொல்:** அபத்தமாகவோ, அனாச்சாரமாகவோ, அஸம்பாவிதமாகவோ, வஞ்சகம், சூது, பொய்யாகவோ கடும், சுடும் சொல்லாகவோ பேசினால் அது அப்படியே **எறி பந்து போல் உன்னைத் தாக்கும்!**

**சொல்:** இனிமையாகவும், சாந்தி சமாதானமாகவும், மிகுந்த பொறுமையாகவும், **இறைவுணர்வோடும்** பேசினால் **வினை பிறரையும் தாக்காது, அது உன்னையும் சூழாது.** மனம் **இதமாகவும் குளிர்ச்சியாகவும்** இருக்கும்.

**செயல்:** கள்ளம், கபடம், சூழ்ச்சியான செயல்களும், வஞ்சினத்தோடு செய்யும் செயல்களும், பொறாமையோடு செய்யும் செயல்களும், (அந்த செயல்) **பிறரைத் தாக்காது; உன்னையே தாக்கும்.**

**செயல்:** உபகாரமாகவும், உறுதுணையாகவும், எந்த நிலையிலும் பிறரை மகிழ்விப்பதாகவும், தீமை செய்தவருக்கும் அதை மறந்து நன்மை பயக்கும் செயலாகவும் செய்தால் உன் மனதிற்கு **கஷ்டம், கவலை, துக்கம், துயரம், பயம்** கண்டிப்பாக தோற்றாது. அனைத்தும் **இறைவன் நடத்துகிறான்** என்ற **பேருணர்வு** உனக்கு உண்டாகும்.

இதனால் நீ உணர்வது.

## ***"கண்ணன் அப்பூதத்தைச் சாட்சியாக கண்டானே தவிர காட்சியில் நுழையவில்லை"***

அப்பூதத்தைப் பற்றிய **எண்ணமோ** அப்பூதத்தின் வார்த்தைக்கு **மறுப்போ, மறு வார்த்தையோ** அப்பூதத்தின் கடும் செயலுக்கு **எதிராக எச்செயலும்** செய்யவில்லை!

## ***"இதுவே நீ அடங்கி இருப்பதாகும்"***

## ***"அடக்க நினைப்பதல்ல"***

**இவன் "சும்மா" இருந்தான்; அதுவும் "சும்மா" ஆகிவிட்டது.**

அப்பூதம் ஆடி, ஓடி, அரட்டி, அலைந்து, கத்தி, கதறி
**ஓய்ந்துவிட்டது!!!**

***உதாரணம்:-*** ஒரு சுட்டு விரல் நீள அகலமுள்ள ரப்பர் பலூனை **நீயே உன் வாய் கொண்டு ஊதினாய்.** அது

பெரிதாகி விட்டது. (எண்ணம், சொல், செயலால் பெரிதாக்கி விட்டாய்) பின் அதன்மேல் கண், காது, மூக்கு, வாய், பல் எனப் படம் வரைந்துவிட்டாய். (உன் கற்பனையால் உனக்கு அன்னியமாய் எண்ணி **பூதாகாரமான** ஓர் உருவத்தை கற்பனை செய்தாய்)

## இப்போது அது உன்னை அழிக்க வருகிறதென பயம் கொள்கிறாய்???

இது என்ன அறிவீனம்? இது என்ன மடத்தனம்?

***உன் பலூன்; நீ ஊதிய காற்று; உன் வரைபடம்;*** இதை உணராமல் ஆத்திரம், வேகம், கோபம், மோஹம், சந்தேகம். ***"இவற்றால் நீ பயந்தால்"*** இதற்கு எவர் பொறுப்பாக முடியும்?

***"அனைத்தும் ஒன்றே"*** அது நாம் நாம் அது என்ற அத்வைத ***"ஞான ஊசியினால்"*** குத்தினால் அது என்ன ஆகும்?

இரண்டென்றான்; இரண்டும் ஒன்றென்றான்; ஒன்றென்றும் இல்லையென்றான்; உணர்வு தெரியலையே! என்ன நிலையாகி விடும்.

ஓய்ந்த பூதம் ஒரு கட்டெறும்பு போல் சிறிதாகிவிட்டது. கண்ணன் அப்பூதத்தை ஒரு சிறிய டப்பியில் அடைத்து வைத்தான். பொழுது புலர்ந்தது. பீமசேனனும் காண்டீபனும் எழுந்தனர். கண்ணன் திருட்டுத் தூக்கத்திலிருந்து விழிப்பது போல் எழுந்தான். அவ்விருவரும் **கதையளந்தனர்.** அதாவது இரவு நடந்த சம்பவத்தையும், அவரவர் செய்த அசகாயசூர சக்திகளையும் ஆதியோடந்தமாகச் சொல்லி, தாங்களும் சோர்ந்து விட்டதாகவும் கூறி,

"ஏ கண்ணா! அந்த பூதம் எப்படி இருந்தது தெரியுமா? இந்த அண்டம் விட்டு வேறு அண்டம் வரையும் அதற்கு அப்பாலும் உயர்ந்திருந்தது. எத்தனை தலைகள், எத்தனை கைகள், எத்தனை பயங்கரமான ஆயுதங்கள், அது போட்ட சப்தத்தில் ஈரேழு பதினான்கு புவனமும் அதிர்ந்தன. ஆனால் நல்ல அசதியினால் நீ தூங்கி விட்டாய். நீயும் எத்தனையோ அசுரர்களை அனாயாசமாகக் கொன்றவன்தான். ஆனால் நேற்று இரவு வந்த பூதத்தை நீ பார்த்தால் **நீயே பயந்திருப்பாய்!** அத்தனை **அதிபயங்கர சொரூபம்** நாங்கள் சோர்ந்து போனதால் அது எங்களை விட்டுவிட்டுப் போய்விட்டது. இன்னமும் சற்று நேரம் நாங்கள் யுத்தம் செய்தோமானால் எங்கள் இருவரையும் **மெதுவடை** சாப்பிடுவது போல் சாப்பிட்டு ஏப்பம் விட்டு போயிருக்கும். பின் நீ எழுந்து எங்களை காணாமல் அலைந்து எங்கள் அண்ணா யுதிஷ்டிரரிடம் சமாதானம் சொல்ல படாதபாடுபட்டிருப்பாய்!! கண்ணா! தூக்கம் வந்தாலும் நீ இப்படி மடத்தூக்கம் (அரிதுயில்) தூங்கக் கூடாது. நீ எங்கு எங்களைக் காத்தாய்? நாங்கள்தான் அது உன்னையும் தாக்காமல் அதனுடன் போரிட்டு நாங்கள் சோர்ந்து போனாலும் உன்னைக் காப்பாற்றி இருக்கிறோம். போன பூதம் இன்னமும் வந்தாலும் வரலாம்! நீ ஒருவன் அதன் கண்களுக்குப் படாமல் இருக்கிறாயல்லவா அதனால் அது உன்னைத் தேடி வரலாம்! நீ எச்சரிக்கையாக இரு." ..... (கண்ணன் இடைமறித்து) வீர சூர சிகாமணிகளே!

கதை சொல்லிக் கொண்டே போனால்???

***"சொல்லும் கதை அமைப்பாக ஒழுங்காக"***

இருக்க வேண்டும்!

## **"கேட்பவனும் ஒன்றி கவனமாக"**

கேட்க வேண்டும்!

## **"இல்லையானால் கதை கதையாக இராது"**

### கழுதை கனைப்பதைப் போல் இருக்கும்!!!

நீங்கள் சொன்ன பூதம் **இதைப்போல் இருக்குமா?** இல்லை வேறாக இருக்குமா?? என அந்த சிறிய டப்பியைத் திறந்து காட்டினான் கண்ணன். இருவரும் அதை கூர்ந்து நோக்கினார். **ஆமாம்! அடேடே!! இது என்ன??? அப்படி உள்ளது இப்படி எப்படி ஆகும்!! இது உன் செப்படி வித்தையா??? ஓஹோ! நீ ஒரு மாயாவி! உன்னால் முடியும்!!** (தலைகுனிந்தனர்).

**கண்ணன் சொன்னான்:** இது மந்திரமும் இல்லை! மாயமும் இல்லை! மாங்காயும் இல்லை! மண்ணாங்கட்டியும் இல்லை!

மனமே மாயை; மனமே ஜகத்; மனமே ஆன்மா; மனமே பரமாத்மா; மனமே ஈசன்; மனமே நீசன்; மனமே ஜீவன்; மனமே அனைத்தும்.

மனதின் கற்பனை எம்மட்டில் அமைகிறதோ, அம்மட்டில் காட்சி, இருப்பு, மாற்றம், மறைவு தமக்குத் தாமே தோற்றுவித்துக் கொள்கிறது. அன்னியமாக எதுவும் இல்லை ஆகையால் தோற்றமும் இல்லை!

## ***மஹான்கள் தம் மனதை உடல் உலக இனிமைக்கும்; தெய்வீக மயக்கத்திற்கும்;***

விடமாட்டார்கள்!!!

நாமரூப குணம் **வந்தால்** அது இனிமை, **உடல் உலகம்!**
தேவ தெய்வ சொரூபமாக **நின்றால்** அது **பேரானந்தம்!!**
முதலாவது இன்ப துன்பத்தையும் பிறவியையும் கொடுக்கும்!
இரண்டாவது பேரானந்தத்தையும் **சொர்க்கத்தையும்** கொடுக்கும்!

## ஆனால் மஹான்கள் மேலே கண்ட இரண்டிற்கும் மனதை விடாமல்

## "தாமே தெய்வமாக இருப்பார்கள்"

தாமே தெய்வமாக இருப்பதனால் **மயக்கம்** இருக்க முடியாது.
காரணம் மாயையைத் தாம் பற்றுவதும் இல்லை!

மாயையில் பற்றப்படுவதும் இல்லை!!

அந்தமாயா காரியம் இவர்களுக்குத் தேவையும் இல்லை!

இவர்களை அறியாமலேயே மாயை உபகாரமாக இருக்கும்!

தாம் அதுவாக (தேவ தெய்வமாக) இருக்கும்போது கூட மாயையின் சாமர்த்தியத்தை இவர்கள் அறியார்!

இந்த மாயையும் இவர்களிடம் தோற்றாமலே தம்மை முடித்துக் கொண்டு சென்றுவிடும்.

(இது அதிரகசியம்)

***குழந்தைகளே!*** நீங்களும் மனம் அடங்கி இருந்தால் இந்நிலை பெற முடியும்.

மஹான்களின் மனம் **ஓர் உறுதியில் நின்றால்** அசையாது! அசைக்கவும் முடியாது! சிறு சிறு அசைவுகளும் அவர்களிடம் தோற்றாது!!!

***சபலம்:*** சின்ன சின்ன **ஆசைகள்.**

**சலனம்:** அந்த ஆசைகளால் மன விரிவு.

**சந்தேகம்:** பிளவுபட்ட நூல் எப்படி ஊசி துவாரத்தில் நுழையாதோ, அதேபோல் தெய்வீகத்திலோ பரசொரூபத்திலோ நிலைத்து நில்லாமை.

இதுவா? அதுவா?? முடியுமா? முடியாதா?? எனக் கேள்வி

உன் முடிவான ***தீர்க்கம்:- முடியும்! முடிந்துவிட்டது!***

## ***'என உறுதியான நம்பிக்கையுடன் இரு''***

அங்கு ஊசியும் இல்லை; நூலும் இல்லை; போக்குவரவும் இல்லை!!!

## ***இருப்பது ஒன்றே; அது நீ; நீயே அது!!!***

உலகமும் அதன் பொருளும் இல்லவே இல்லை. இது ஸத்யம்! ஆனால் இருப்புடையது போல் தோற்றுகிறதே! **அது உன் எண்ணம். எண்ணத்தின் விரிவும்** ஆகும்! எண்ணம் இல்லாமல் ஆக வேண்டுமானால் இறைவன் உடைமையாகவும் பின் அனைத்தும் இறைவனாகவும் **திரும்ப திரும்ப திரும்ப** மாற்றிப் பழகு. அது உன்னால் முடியும்! அனைத்தும் இறைவனானால் அந்த இறைவனும் **நீயும் ஒன்றாக முடியும்!** முடிவு அனைத்தும் ஒன்றே என்ற நிலை அவஸ்யம் பெற முடியும் இது ஸத்யம்.

# இன்பக் கனலே குருதேவா...

## பல்லவி

குருதேவா! குருதேவா!
திருவடித் தூளிசற் குருதேவா!

## சரணங்கள்

அருள்வடிவாம் சற் குருதேவா!
ஆனந்த மோனசற் குருதேவா!

(குருதேவா...)

இன்பக் கனலே குருதேவா!
ஈர்த்தெமை ஆள்வாய் குருதேவா!

(குருதேவா...)

உந்தன் திருவடி குருதேவா - எம்
ஊழ்வினை நீக்கும் குருதேவா

(குருதேவா...)

எங்கும் நிறைந்திடும் குருதேவா! எமை
ஏற்றருள் புரிவாய் குருதேவா!

(குருதேவா...)

ஐயா! உந்தன் திருவடியில்!
ஒன்றிட அருள்வாய் குருதேவா!

(குருதேவா...)

ஓம் குருதேவா! சரணமையா!
ஔவியம் களைவாய் குருதேவா!

(குருதேவா...)

குருவடி சரணம்! குருதேவா! - உந்தன்
திருவடியே துணை! குருதேவா!

(குருதேவா...)

